ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:

# நான் கண்ட நல்லது

(நம்மாழ்வார் தான் கண்ட நல்லதாக நமக்கு உபதேசித்த வராஹாவதார வைபவம்)



ஸ்ரீ முஷ்ணம் பூவராஹப்பெருமாள்



அவன் திருவடியில் வராஹனையே தான் கண்ட நல்லதாக உபதேசித்த திருக்குருகூர் நம்மாழ்வார்

எழுதியவர் : ஸ்ரீ உ.வே. வேளுக்குடி க்ருஷ்ணன் ஸ்வாமி

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:

# நான் கண்ட நல்லது

(நம்மாழ்வார் தான் கண்ட நல்லதாக நமக்கு
உபதேசித்த வராஹாவதார வைபவம்)

எழுதியவர் :
ஸ்ரீ உ.வே. வேளுக்குடி க்ருஷ்ணன் ஸ்வாமி

வெளியீடு :
**கிஞ்சித்காரம் ட்ரஸ்ட்**
6, பீமசேனா கார்டன் தெரு, மைலாப்பூர்,
சென்னை - 600 004. போன் : 044-24992728
E-mail : kinchitkaram@yahoo.co.in

ஸ்ரீ:

# முகவுரை

"இனியது தனி அருந்தேல்" என்பது பழந் தமிழ் மொழி. "ஏக ஸ்வாது₃ந பு₄ஞ்ஜீத" என்று அதுவே வடமொழியில் காண்கிறது. நம் கையில் ஓர் இனிய பொருள் கிடைத்தால் அதைப் பிறரோடு பகிர்ந்து கொள்ள வேண்டும்.

எளியவர்களிடம் நாம் உணவைப் பகிர்ந்து கொள்ள வேண்டும். அறிஞர்கள் தங்கள் உயர்ந்த சிந்தனைகளைப் பகிர்ந்து கொள்வர். ஆன்றோர்கள் அறிவைப் பகிர்ந்து கொள்வர். ஆழ்வார்களோ பக்தியையும், முக்தி அளிக்கும் வழியையும் நம்மோடு பகிர்ந்து கொள்வர். தானறிந்த நல்லது தனக்கே பயன்படாவிடில் அவன் தாழ்ந்தோன். தானறிந்த நல்லது தனக்குப் பயன்பட்டால் அவன் வாழ்ந்தோன். தானறிந்த நல்லது பிறர்க்கும் பயன்பட்டால் அவன் விண்ணுளாரிலும் சீரியர். அந்த சீரியரே ஆழ்வார்களில் தலைவரான நம்மாழ்வார்.

மறைப் பொருட்களை அறிவதே அரிது - அதிலும் அரிது அதன் வழி ஒழுகி நடத்தல் - அதிலும் அரிது அதைப் பிறர்க்கு எடுத்துச் சொல்லி வழிகாட்டுதல். அவ்வழிகாட்டியாக விளங்குபவரே காரிமாறனான சடகோபன்.

திருமாலால் மயர்வு அற மதிநலம் அருளப்பட்ட சடகோபன், தான் கண்ட நல்லதைக் கீழ்க்கண்ட பாடல் மூலம் நம்மோடு பகிர்ந்து கொள்கிறார்:

"ஏனச் சொல் ஆயினுமாக * எறிதிரை வையம் முற்றும்
ஏனத்துருவாய் இடந்த பிரான் * இருங்கற்பகம் சேர்
வானத்தவர்க்கும் அல்லாதவர்க்கும் மற்றெல்லா யவர்க்கும்
ஞானப்பிரானை அல்லால் இல்லை * நான் கண்ட
நல்லதுவே"

(திருவிருத்தம் - 99)

(என்னுடைய சொல் எளியவன் சொல்லாயிருப்பினும் நான் கண்ட நல்லதை உங்களுக்கு சொல்கிறேன். கடலால் சூழப்பட்ட பூமியை இடந்தெடுத்து, காத்த ஞானப்பிரானான வராஹப்பெருமானே தேவர்களுக்கும், மனிதர்களுக்கும் மற்றும் எல்லோருக்கும் ஒரே புகல்).

ருக் வேத ஸமமான "திருவிருத்தம்" என்னும் தம் அருளிச்செயலில் தான் கண்ட நல்லதாகச் நம்மாழ்வார் சொல்லிக் கொள்வது - "வராஹப் பெருமானையே". திருமாலின் அவதாரங்களுள் மிகச் சிறந்ததாக ஆழ்வார் ஆசார்யர்களால் கொண்டாடப்பட்ட வராஹ அவதாரத்தைப் பல கோணங்களில் அநுபவித்து அவனே "நாம் கண்ட நல்லது" என்று வெளியிடுவதே இப்புத்தகத்தின் நோக்கம்.

ஸ்ரீ:

# பொருளடக்கம்

# திருமாலின் அவதாரங்கள்

''அவதரணம்'' என்னும் வடமொழிச் சொல்லுக்கு 'கீழே இறங்குவது' என்று பொருள். திருமால் அவதரிக்கிறான் என்றால் ''ஸ்ரீவைகுண்டம்'' எனும் உயர்ந்த இருப்பிடத்திலிருந்து திருப்பாற்கடலுக்கு இறங்கி, அங்கிருந்து இப்பூவுலகிலே விலங்கு, தேவன், மற்றும் மனித உருக்கொண்டு இறங்கி வருகிறான் என்று பொருள். அவ்வவதாரங்கள் எண்ணிறந்தவையாக இருப்பினும், ''தசாவதாரங்கள்'' என்று பத்தாகச் சுருக்கி ஆழ்வார்கள் அனுபவித்தார்கள்.

'தேவுடைய மீனமாய் ஆமையாய் ஏனமாய்
அரியாய்க்குறளாய்
மூவுருவில் இராமனாய்க் கண்ணனாய்க் கற்கியாய்....'
(பெரியாழ்வார் திருமொழி 4-9-9)

என்று பெரியாழ்வார் பத்து அவதாரங்களைப் பட்டியலிட்டார்.

மத்ஸ்ய, கூர்ம, வராஹ, நரஸிம்ஹ, வாமந, பரசுராம, தசரதராம, பலராம, க்ருஷ்ண, கல்கி என்று இவ்வரிசையில் பெருமாளின் அவதாரங்கள் சிறுவர் முதல் பெரியோர் வரை அனைவரையும் வியக்க வைக்கும் வரலாறு படைத்தவை. இவற்றில் முதல் ஐந்து, முதல் யுகமான க்ருத யுகத்திலும், பரசுராம, தசரதராம அவதாரங்கள் இரண்டாவது யுகமான த்ரேதாயுகத்திலும், பலராம, க்ருஷ்ண அவதாரங்கள் மூன்றாவது

யுகமான த்வாபரயுகத்திலும், கடைசி அவதாரமான கல்கியாக கடைசி யுகமான கலியுகத்திலும் பிறக்கிறார்.

மேலும், முதல் மூன்று அவதாரங்கள் விலங்குருவிலும், நரஸிம்ஹ அவதாரம் விலங்கும் மனிதனும் கலந்த உருவிலும், வாமனன் தேவ உருவிலும், கடைசி ஐந்து அவதாரங்கள் மனித உருவிலும் பிறக்கிறார். இது மனித இனத்தின் பரிணாம வளர்ச்சியை உருவகப்படுத்தும். "எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்" என்று சாதி, இன, மொழி, ஆகிய எல்லா வேறுபாடுகளையும் கடந்து எம்பெருமான் பிறக்கிறான் என்பதை நம்மாழ்வார் கொண்டாடினார்.

ஸ்ரீ பாகவதத்தில் சுகாசார்யர் இருபத்தைந்து அவதாரங்களை வெளிப்படுத்தினார். தசாவதாரங்கள் தவிர, யக்ஞர், கபிலர், தத்தாத்ரேயர், ஸநத்குமாரர், நரநாரயணர், த்ருவன், ப்ருது, ருஷபர், ஹயக்ரீவர், ஹரி, ஹம்ஸ, மநு, தன்வந்தரி, வ்யஸர், புத்தர் ஆகிய அவதாரங்கள் பாகவதத்தில் கூறப்பட்டுள்ளன. இனி நாம் அவதாரங்களின் பயன்களை உற்று நோக்குவோம்.

## அவதாரங்களின் பயன்கள்

பரித்ராணாய ஸாதூ$_4$நாம் விநாசாய ச து$_3$ஷ்க்ருதாம்

த$_4$ர்ம ஸம்ஸ்தா$_2$பநார்த்தா$_2$ய ஸம்ப$_4$வாமி யுகே$_3$ யுகே$_3$

என்று கண்ணன் கீதையில், நல்லோர்களைக் காக்கவும், தீயவரை அழிக்கவும், தர்மத்தை நிலைநாட்டவும் தான் பிறப்பதாகக் கூறுகிறான். இம்மூன்றுமே பெருமானின் அவதாரங்களின் முக்கியமான பயன்கள். மேலும் கருணையே வடிவெடுத்தவனான எம்பெருமான், அவதாரங்கள் வாயிலாக தன் மங்கலமான குணங்களை நமக்கு வெளிப்படுத்தி அதில் நம்பிக்கையூட்டி, அமைதியான வாழ்க்கைக்கு வழிவகுக்கிறான். இதை பகவத் ராமாநுஜரின் சீடரான கூராத்தாழ்வானின் திருவாக்கால் விளக்குவோம்.

"அதிமாநுஷ சீல வ்ருத்த வேஷை:
அதிவ்ருத்தாமர விக்ரம ப்ரதாபை:
அதி லங்கி$_4$த ஸர்வலோக ஸாம்யம்
வரயே வைஷ்ணவ வைப$_4$வாவதாரம்"

- அதிமாநுஷஸ்தவம் - முதல் ச்லோகம்

(மனிதர்களைப் போலன்றி, திவ்யமான பண்புகள், நடத்தை, உருவம் ஆகியவற்றுடன் வீர தீரச் செயல்கள் பல புரிந்த, ஒப்பிலாத எம்பெருமானுடைய விபவ அவதாரங்களை வணங்குகிறேன்.)

தன் குணங்களை வெளிப்படுத்திக் கொள்ளவே எம்பெருமான் மாறி மாறிப் பிறக்கிறான். மேலும் நம் புலன்களுக்கு அப்பாற்பட்டவன் அவன். "மனனுணர்வு அளவு இலன் பொறியுணர்வு அவை இலன்" என்று நம்மாழ்வார், பெருமானை மனத்தாலோ, புலன்களாலோ அளவிட்டறிய அரியவன் என்றார். இதையே கூரத்தாழ்வான்,

"இந்த்₃ரியாணாம் அதீந்த்₃ரியோஸி.....வாசோ தி₄யச்ச தத ஏவ ந கோ₃சரோSஸி"

[அதிமாநுஷ ஸ்தவம் - ச்லோகம் 8]

என்று "நம் மனத்துக்கும் வாக்குக்கும் எட்டாதவன் எம்பெருமான்" என்று அருளிச்செய்தார்.

இப்படி அவன் நம் அறிவுக்கு அப்பாற்பட்டு இருந்தால் மக்களுக்கு அவன் பால் நம்பிக்கையும் பக்தியும் ஏற்படாது என்பதற்காக, அனைவரும் கண்டு அநுபவிக்க ஏற்றவாறு பல படிகளாலும் அவதரிக்கிறான். அவன் தன்னைத் தாழவிட்டுக் கொள்ளும் சீல குணத்தைக் கொண்டாடச் சொற்கள் போதாது. சீல குணமாவது - மிகப் பெரியவன் தன் ஏற்றத்தையும் மிகத் தாழ்ந்தவனுடைய குறைகளையும் கணிசியாமல் கலந்து பழகும் குணம்.

" சீல: க ஏஷ: தவ ஹந்த தயைக ஸிந்தோ₄ .......... க்ஷுத்ரே

ப்ருத₂க் ஜநபதே₃ ஜக₃த் அண்ட₃ மத்₄யே....

த்வம் அத்ர அவதீர்ய நநு லோசந கோ₃சரோSபூ₄:"

(அதிமாநுஷஸ்தவம் - 10)

என்று, "குறைவாளர்கள் நிறைந்த இவ்வுலகத்தில் அனைவருடைய கண்களுக்கும் புலப்படும்படி தேவரீர் பிறந்ததே! இது என்ன சீலம்!" என்று கூரேசர் கொண்டாடுகிறார். ஆக, தன் குணங்களை வெளிப்படுத்துவதும், ஸம்ஸாரிகளோடு கலந்து பழகி, அவர்ளைத் தன் பால் ஈர்ப்பதுமே பகவானுடைய அவதாரத்துக்கு உயர்ந்த பயன்கள்.

# வராஹ அவதாரம்

'வராஹம்' என்றால் பன்றி' என்று பொருள். விலங்கினத்திலேயே மிகத் தாழ்ந்ததாக நாம் கருதும் பன்றியாக புருஷோத்தமன் பிறந்தான். இது அவனுடைய சீல குணத்துக்குச் சான்று. அவன் ஏன் பன்றியாகப் பிறக்க வேண்டும் என்பதைக் காண்போம்.

ஒரு முறை பிரமனின் புதல்வர்களான ஸநகர், ஸநத்குமாரர் முதலானோர், ஸ்ரீ மஹா விஷ்ணுவைத் தர்சிக்கச் சென்றனர். அப்போது எம்பெருமான் திருக்கண் வளர்ந்து கொண்டு (யோக நித்திரையில்) இருந்த படியால் வாயிற் காவலர்கள் (ஜய, விஜயர்கள்) பிரமனின் புதல்வர்களைச் சற்று நேரம் காத்திருக்கச் சொன்னார்கள். கோபமுற்ற பிரமனின் புதல்வர்கள், வாயிற்காவலர்களை, "அஸுரர்களாகவும் அரக்கர்களாகவும் மும்முறை பிறந்து துன்புறுவீர்!" என்று சாபமிட்டார்கள். அச்சமுற்ற, ஜயவிஜயர்கள் திருமாலைச் சரண்புக, எம்பெருமானும் அவர்களை அமைதிப்படுத்தி, "மும்முறையும் என் கையாலாயே அழியும் பேறு பெறுவீர்!" என்று அருளினான். பிரமன் புதல்வர்களின் இந்த சாபத்தினால், அவர்கள் ஹிரண்யாக்ஷன்-ஹிரண்யகசிபு என்று க்ருதயுகத்திலும், ராவண - கும்பகர்ணர்களாக த்ரேதா யுகத்திலும், சிசுபால - தந்த வக்த்ரர்களாக த்வாபரயுகத்திலும் பிறந்தார்கள்.

இம்மூன்று பிறவிகள் எடுத்த இவர்கள் முறையே வராஹ, நரஸிம்ஹ, ராம, க்ருஷ்ண அவதாரங்களையெடுத்த திருமாலால் கொல்லப்பட்டனர்.

ஹிரண்யாக்ஷன் என்னும் அஸுரனைத் திருமால் பன்றியாகப் பிறந்து, கொன்றதை, ஸ்ரீவிஷ்ணு புராணத்தில்

ஸ்ரீபராசர மஹரிஷியும், ஸ்ரீபாகவதத்தில் ஸ்ரீசுகமஹர்ஷியும் அற்புதமாக விளக்கியுள்ளார்கள். அதன்படி, ஹிரண்யாக்ஷன், பூமாதேவியை ப்ரளய ஸமுத்ரத்தின் ஆழத்தில் ஒளித்துச் சிறைப்படுத்தினான். பூமிதேவியும் தன்னை விடுவிக்கும்படி பெருமானிடம் வேண்டினாள். அதே சமயத்தில் நான்முகன், தன் புதல்வனான ஸ்வாயம்புவ மனுவை, படைப்புத் தொழிலைச் செய்ய ஆணையிட்டான். ஆனால் பூமியே கடலுக்குள் அமிழ்ந்திருக்கும்போது, படைத்த மக்களை மனு எங்கு வசிக்கச் செய்வார்? ஆகவே அவர் பரமனை நோக்கி,

" யதோ$_3$க: ஸர்வ ஸத்த்வாநாம் மஹீ மக்$_3$நா மஹாம்ப$_4$ஸி |

அஸ்யா உத்த$_3$ரணே யத்நோ தே$_3$வ தே$_3$வ்யா விதீ$_4$யதாம் ||"

- ஸ்ரீ பாகவதம் (3-13-15)

(மூழ்கிக்கிடக்கும் பூமிப் பராட்டியை வெளியே கொண்டு வர முதலில் வழி சொல்லுவீராக) என்று வினவினார். இதன் பொருட்டு, பிரமன் ஆழ்ந்த சிந்தனையில் இருந்தபோது, அவன் மூக்கிலிருந்து சிறுபன்றிக்குட்டி ஒன்று பிறந்தது.

"வராஹதோக: நிரக$_3$ாத் அங்கு$_3$ஷ்ட$_2$ பரிமாணக:

.........க$_3$ஜ மாத்ர ப்ரவவ்ருதே$_4$ தத$_3$த்$_3$பு$_4$தம் அபூ$_4$ந்மஹத்"

- ஸ்ரீ பாகவதம் (3-13-18, 19)

(பார்த்துக் கொண்டிருக்கும்போதே அப்பன்றிக்குட்டி யானையளவும் அதற்கு மேலும் வளர்ந்தது)

வராஹப் பெருமான் பெரிய உருவத்தோடே கடலுள் புகுந்து, ஹிரண்யாக்ஷனுடன் போரிட்டு, அவனைக் கொன்று பூமாதேவியைத் தன் கோரைப் பற்களாலே இடந்து எடுத்து தன் திருமடியிலே அமர்த்திக் கொண்டு பூவராஹப்பெருமாளாக உலகோர் கண்களுக்கு விருந்தளித்தான்.

## வராஹ அவதாரத்தின் தனிச் சிறப்பு

அனைத்து அவதாரங்களும் திருமாலுடையவையே. ஆயினும் "லோகோ பி₄ந்ந ருசி:" (உலகோர் ரஸனை வேறுபட்டிருக்கும்) என்பதாலே அவரவர் விருப்பத்திற்கேற்ப பற்பல உருவங்கள், குணங்கள், திருநாமங்கள், அலங்காரங்கள் ஆகியவற்றைக் கொண்டு அடியார்களை அவன் மகிழ்விக்கிறான். சிலருக்கு இராம பிரானைப் பிடிக்கலாம்; சிலருக்குக் கண்ணபிரானிடத்தில் ஈடுபாடு அதிகமாக இருக்கலாம்; மற்றும் சிலருக்கு நரஸிம்ஹப் பெருமாளிடம் அன்பு மிகுதியாக இருக்கலாம். அவரவர்கள் தங்களுக்கு ஈடுபாடுள்ள அவதாரத்தின் பெருமைகளைப் பேசி மகிழ்வர். இது ஓர் ஆரோக்கியமான போட்டிமனப்பான்மை. உற்று நோக்கில் பெருமைகளனைத்துமே ஸ்ரீமந்நாராயணன் ஒருவனையே சாரும்.

ஆழ்வார்களும் ஆசார்யர்களும் ஒரே குரலில் ஸ்ரீவராஹப் பெருமானையே கொண்டாடி உள்ளனர். "வராஹனே சிறந்தவன்; அவன் திருவடிகளைப் பற்றுவதே உய்வதற்கு ஒரே வழி" என்பது நம்மாழ்வார் கருத்து. இதையே இந்நூலின் முதலில் காட்டப்பட்டபடி (திருவிருத்தத்தில்) "நான் கண்ட நல்லதுவே" என்று நித்ய ஸூரிகளுக்கும், தேவர்களுக்கும், மனிதர்களுக்கும், விலங்குகளுக்கும்கூட பற்றத்தக்க ஒரே தெய்வம் வராஹனே என்று உறுதியாகக் கூறுகிறார்.

இதை அடியொற்றி, ஸ்ரீபராசர பட்டர், ஸ்ரீவேதாந்த தேசிகன் முதலிய பேராசிரியர்கள் ரசிக்கத்தக்க பற்பல பொருள்களைக் காட்டியுள்ளனர்.

## பட்டர் போற்றிய பரமன் - வராஹனே

அனைத்துலகம் வாழப் பிறந்த ஸ்வாமி எம்பெருமானாரால் (பகவத் ராமாநுஜராலே) அபிமானிக்கப்பட்டவராய், கூரத்தாழ்வானுடைய திருக்குமாரராய், திருவரங்கத் தெம்பெருமானுடைய அபிமான புத்ரராய் விளங்கிய ஸ்ரீ பராசரபட்டர் "ஸ்ரீரங்கராஜ ஸ்தவம்" என்னும் (தாமியற்றிய) தோத்திரநூலின் உத்தர சதகத்தில் (63ம் ச்லோகத்தில்)

"சரணமஸி மே ரங்கிந்! த்வம் ..... மூலகோல தநுர் ப₄வந்"

(ஹே ஸ்ரீரங்கநாதனே! ஆதிவராஹரூபியான தேவரீர் அடியேனுக்குப் புகலிடம் ஆகிறீர்)

என்று ஸ்ரீ வராஹப் பெருமானையே உலகுக்கு ஒரே புகல் என்று உறுதி கூறுகிறார். ஸ்ரீ பட்டர் வராஹப் பெருமானின் உபதேசங்கள் நிரம்பிய வராஹ புராணத்தின் ஒரு பகுதியான கைசிக புராணத்திற்கு (நம்பாடுவான் வரலாற்றுக்கு) உரை அருளியுள்ளார். அதில் வராஹன் பெருமை சொல்லும் போது, மற்ற அவதாரங்களை வேடிக்கையாகத் தாழ்த்திச் சொல்லுகிறார். வராஹ அவதாரத்தின் உபதேசத்தையே நாம்கொள்ள வேண்டும். மற்ற உபதேசங்கள் குற்றமுள்ளவை. ஏனெனில்

1. வைகுந்தநாதன் எட்டாத உயரத்தில் இருப்பான். அவன் வார்த்தை உயர்ந்தோருக்கே பயன்படும்.
2. திருப்பாற்கடல் நாதனின் வார்த்தை கடலோசையோடே கலந்து பொருளற்றதாக இருக்கும்.
3. மத்ஸ்ய அவதாரத்தை (மீன்) நாம் பற்ற முடியாது.

அவனே கடலிலிருந்து கரையேற முடியாதவன். நம்மை ஸம்ஸாரக்கடலிலிருந்து எப்படி மீட்பான்?

4. கூர்மாவதாரத்தையோ (ஆமை) மந்தர மலை அழுத்துகிறது. ஸம்ஸார பாரத்தால் அழுத்தப்படும் நம்மை எப்படிக் கைதூக்குவான்?

5. நரஸிம்ஹனுக்கு, கழுத்துக்கு மேலே ஒருபடி; கழுத்துக்குக் கீழே ஒருபடி. அதனால் ஸந்தேஹம் வருகிறது.

6. வாமன மூர்த்தி சிறிய காலைக்காட்டி பெரிய காலாலே அளந்த வஞ்சகன். நம்பிக்கையே வராது.

7. பரசுராமரோ கோபக்காரர். மன்னிக்கவே தெரியாதவர். பயத்தாலேயே அருகில் போக மாட்டோம்.

8. இராமன் குரங்குகளோடே கலந்து பேசியவன். புண்யத்திற்காக காத்துக்கிடக்கும் மனிதர்களான நமக்கு ஏற்காது.

9. பலராமன் மத்ய பானம் பண்ணி தன் போக்கிலேயே போவார். நம் போக்குக்கு வரமாட்டார்.

10. கண்ணன், ஆண்டாள் கூறியபடி ஏலாப் பொய்கள் உரைப்பவன்; ஏமாற்றுப் பேர்வழி.

11. கல்கியை இனிமேல் தான் பார்க்கவே போகிறோம்.

இவ்வவதாரங்களை விட, ப்ரளய ஸமுத்ரத்தில் மூழ்கிக் கிடந்த பூமிப்பராட்டியை உத்தரணம் பண்ணிய வராஹனே, பூமியில் வாழும் நம்மையும் உயர்த்துவான். ஆதலால் அவனையே பற்றுங்கள் என்கிறார் பட்டர்.

"கோ$_3$பாயேத் அநிசம் ஜக$_3$ந்தி குஹநா போத்ரீ
பவித்ரீக்ருத ப்ரஹ்மாண்ட$_3$: ப்ரளயோர்மி
கோ$_4$ஷ கு$_3$ருபி$_4$: கோ$_4$ணா ரவை: கு$_4$ர்கு$_4$ரை:"

(தசாவதாரஸ்தோத்ரம் 4)

"வராஹப் பெருமானின் மூக்கிலிருந்து வெளிவரும், ப்ரளய காலத்தின் கடலலைகளைப் போன்ற "குர் குர்" என்ற ஒலி ப்ரஹ்மாண்டத்தைப் புனிதப்படுத்துகிறது" என்று கொண்டாடுகிறார். வேதங்களைக் கற்று, நம்மைப் புனிதமாக்கிக் கொள்வது கடினம்; வேத முதல்வனான ஸ்ரீ வராஹப் பிரானின் ஒலியால் நாம் புனிதமடைவது எளிது.

மேலும் ஸ்ரீ தேசிகன் "பூ$_4$ஸ்துதி" என்னும் தம் தோத்திர நூலில் பூமிப்பராட்டி கடலுள் மறைந்ததற்கு அழகிய காரணம் கூறுகிறார்.

"ஆச்வாஸநாய ஜக$_3$தாம் புருஷே பரஸ்மிந்
ஆபந்ந ரக்ஷண தசாம் அபி$_4$நேது காமே
அந்தர்ஹித இதர கு$_3$ணாத் அப$_3$லா ஸ்வ பா$_4$வாத்
ஔத$_3$ந்வதே பயஸி மஜ்ஜநம் அப்$_4$யநைஷீ:"

(- பூஸ்துதி - 14)

(" ஆபத்திலிருக்கும் அடியார்களைக் காப்பவன் தான் ஒருவனே" என்று பகவான் உலகோர்க்கு உணர்த்த எண்ணிய

போது, பூமிப்பராட்டியே! நீ அவனுக்கு உதவ எண்ணி, அபலையைப்போல் கடலுள் மூழ்கினாய்)

வராஹப் பெருமாளும் பூமிப் பிராட்டியும் போட்டி போட்டுக் கொண்டு உலகோரைக் காப்பது என்பது நினைக்கவே சிலிர்க்கிறது. இவர்களை விடுத்து வேறு அவதாரங்களைப் பற்ற முடியுமோ?

ஸ்ரீ வராஹப்பெருமான் பூமிப் பிராட்டிக்குப் பண்ணிய உபதேசங்களில் சிறந்தவையான 'ஸ்திதே மனஸி' எனத் தொடங்கும் இரண்டு ச்லோகங்கள் 'வராஹ சரம ச்லோகம்' என்று கொண்டாடப்படுகின்றன. இவற்றை விளக்கும் 'ரஹஸ்ய சிகாமணி' என்னும் நூலின் முன்னுரையில் ஸ்ரீ வராஹப் பெருமானின் தனிச்சிறப்பை ஸ்ரீதேசிகன் வெளியிடுகிறார். அவையாவன,

1. ஸ்ரீவைகுண்டத்திலிருக்கும் பரமபதநாதன் பிறவிக் கடலின் கரையேறி வந்தவர்களுக்குத் தன் குணங்களாகிற அமுதூட்டுகிறான். ஆனால் வராஹனோ எளியோர் ஸம்ஸாரக் கடலில் கரைந்து போகாதபடி கரையேற்றுவான்.

2. திருப்பாற்கடலில் வாழும் வ்யூஹ வாஸுதேவன் மேலிடத்தில் இருப்பவன். மாறாக வராஹனோ தன் அன்பும் எளிமையும் தோற்ற கீழ்நிலத்தில் புகுவான்.

3. நீந்தும் தன் குட்டிகளை மீன் தன் பார்வையாலேயே காக்கும் இயல்புடையது. மத்ஸ்ய அவதாரமான பெருமான் உலவித்திரியும் மக்களைத் தன் பார்வையாலே காக்கிறான்; ஆனால் வராஹனோ

"மரணப்படுக்கையில் நினைவிழந்து கிடக்கும் சரணாகதனை என் நினைவாலே காக்கிறேன்" என்கிறான்.

4. பாற்கடல் கடையப்பட்ட போது மத்தாகச் சுழலும் மந்தரமலை கடலில் மூழ்காமல் தாங்கினான் கூர்ம மூர்த்தி. வராஹனோ கடலில் மூழ்கிய பூமியையும், அதைத் தாங்கிய மலைகளையும் சேர்த்து தன்கோரைப் பற்களாலே காத்தான்.

5. நரஸிம்ஹப் பெருமான், பூமியின் ஓரிடத்தில் தட்டப்பட்ட தூணைப் பிளந்தான். வராஹனோ பூமி முழுவதையும் தட்டுத் தடுமாறி பிளந்து போகாமல் இறுகப் பண்ணினான்.

6. வாமன மூர்த்தி வஞ்ச நெஞ்சத்துடன் தன் அழகிய கையால் மஹாபலி தானம் கொடுக்கத் தன் பூமியை பெற்றான். வராஹனோ நேர்மையான வீரத்துடன் அஸுரனான ஹிரண்யாக்ஷனை அழித்து தன் பூமியை தானே காத்தான்.

7. பரசுராமன் விரோதிகளை அழிக்க மழு என்னும் சிறு ஆயுதத்தை ஸாக்ஷியாக்கினான். வராஹன் விரோதியை அழித்ததற்கு பூமண்டலமே ஸாக்ஷியாயிற்று.

8. இராமன் தன் அவதாரம் முடியும் போது

"அன்று சராசரங்களை வைகுந்தத் தேற்றி"

(பெருமாள் திருமொழி 10-9)

என்ற குலசேகராழ்வார் பாசுரத்தின்படி பூமியிலுள்ள தாவரங்களையும் விலங்கினத்தையும் வைகுந்தத் தேற்றினான். வராஹனோ பூமியையே தன் தோளில் ஏற்றுவதைத் தன் அவதாரத்திற்கு பயனாக் கொண்டான்.

9. பலராமன் பூமியைக் குத்திப் பிளந்து கேடு விளைவிக்கும் ஓர் செயற்கைக் கருவியான கலப்பையைக் கையில் பிடித்தார். வராஹனோ பூமி பிளந்து போகாமல் இருக்க இயற்கையில் தன் திருமேனியோடு பொருந்திய கோரைப் பற்களால் மென்மையாகத் தூக்கினார்.

10. கண்ணன் கீதாசார்யனாக அர்ஜுனனுக்கு உபதேசிக்கும் போது 700 ச்லோகங்களில், முதலில், கஷ்டமான கர்மயோக, ஜ்ஞானயோகங்களைச் சொல்லி, கடைசியில் உயர்ந்த தாகவும், செய்வதற்கு எளிதாகவும் இருக்கும் சரணாகதியை சரம ச்லோகத்தில் வெளிட்டான். கீதையென்னும் பெருங்கடலில் நீச்சல் தெரியாத நாம் மூழ்கிக்குளித்து, கல்லையும், மண்ணையும் தள்ளி, முத்தைத் தேடி எடுக்க வேண்டும். வராஹனோ முதலிலேயே சரம ச்லோகங்களை - இரண்டு ச்லோகங்களாக நாம் கஷ்டப்படாமல் தானே தேர்ந்தெடுத்துக் கொடுத்தான்.

11. கல்கி அவதாரம், வருங்காலத்தில் (கலியுகத்தின் இறுதியில்) உதவிபுரியும். வராஹன் முற்காலத்திலேயே (முதல் யுகத்தில்) உதவி புரிந்தவன்.

இக் காரணங்களால் நமக்காகப் பிறந்த வராஹனே நம் எல்லோரும் பற்றத் தகுந்த புகல் என்பதில் ஐயமில்லை.

## வராஹம் - சொல்லும் பொருளும்

இதிஹாஸங்களிலும், புராணங்களிலும் ஆழ்வார்கள் பாசுரங்களிலும் எம்பெருமானின் பன்றியான அவதாரத்தை பல நாமங்களாலே குறித்துள்ளார்கள். அதன் பொருளுக்குரிய முக்கியத்துவத்தை விளக்குகிறேன். வடமொழியில் எழுதப்பட்ட அமரகோசம் என்னும் நூலில் பன்றியைக்குறிக்கும் சொற்களை பட்டியல் இடும்போது பின்வரும் ச்லோகம் காணப்படுகிறது.

வராஹ: ஸூகர: க்$_4$ருஷ்டி: கோல: போத்ரீ கிரி: கிடி:|

த$_3$ம்ஷ்ட்ரா கோ$_4$ணீ ஸ்தப்$_3$த$_4$ரோமா க்ரோடோ$_3$

பூ$_4$தா$_3$ர இத்யபி ||

இதிலுள்ள ஒவ்வொரு சொல்லும் பல நூல்களில் உபயோகப்படுத்தப்பட்டுள்ளன. இதன் பொருள் :

வராஹ: 'வரம்' என்றால் உயர்ந்த விளைநிலமான பூமி அதை 'ஆஹந்தி' மீட்டுக்கொண்டு வந்தவன்.

ஸூகர: பல குட்டிகளைப் போடுவது. உலகத்தையே படைக்குமவன்.

க்$_4$ருஷ்டி : உயரமான இடங்களை இழுத்து கரைகளை சமமாக இடுகிறான்.

கோல: உடம்பை ஒடுக்குவது. தன் குட்டிகளோடு சேர்ந்து ஒடுக்குவது, உலகத்தையே தனக்குள் ஒடுக்குவது.

போத்ரீ நீண்ட வாய்படைத்தது.

கிரி : வாயால் பூமியை கிளறியது.



ஸ்ரீ ஆதிவராஹன் - திருமலை

கிடி : தான் தனித்து தனி வழியே செல்வது.

த$_{3}$ம்ஷ்ட்ரா : வலிமையான கடைவாய்ப்பல் உடையது.

கோ$_{4}$ணீ மூக்கு நீண்டது, பருத்தது.

ஸ்தப்$_{3}$த$_{4}$ ரோமா சிலிர்த்த மயிரோடு கூடியது

க்ரோட$_{3}$: வளர வளர கெட்டியாகவும் வலிமையாகவும் ஆவது.

பூ$_{4}$த$_{3}$ரா : பூமியை பிளப்பது

தமிழ்ச்சொற்களில் ப்ரபலமானவை: கேழல் (ஆண்பன்றி) ஏனம், பன்றி (காட்டுப் பன்றி)

ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ர நாமத்தில் பீஷ்மாசார்யர் 538-ம் திருநாமம் முதல் 543-ம் திருநாமம் வரை வராஹ அவதாரத்தை விளக்குகிறார்.

த்ரிபத$_{3}$ : மூன்று கொண்டைகள் உடையவன்

த்ரிதசாத்$_{4}$யக்ஷ : தேவர்களை ப்ரளயத்திலிருந்து காத்த முதல்வன்

மஹாச்ருங்க : பெருங்கோரைப்பற்கள் உடையவர்

க்ருதாந்தக்ருத்$_{3}$ : யமன் போன்றஹிரண்யாக்ஷனைக் கொன்றவன்

மஹாவராஹ : பெருங்கேழலார்

கோவிந்த : பூமியை மீட்டு அடைந்தவன்

வராஹனுக்குண்டான பல திருநாமங்கள் போலே அவனுக்கு எண்ணில் அடங்கா குணங்களும் உருவங்களும் உண்டு. அதற்கு தகுந்தாற்போலே பல திவ்ய தேசங்களிலே தர்சனம் கொடுக்கிறார். அவனுடைய பல ரூபங்களில் சிலவற்றை சிந்தனை செய்வோம்.

# ஆதிவராஹன்

பிரமனின் படைப்பு தொழிலில், தொடக்கத்திலேயே வராஹ அவதாரம் ஏற்பட்ட படியால் பழமை காரணமாகவும் உலகத்திற்கே காரணம் என்றபடியாலும் ஆதி வராஹன் என்று கொண்டாடப்படுகிறான். 108 திவ்யதேசங்களில் ருக்வேதத்தில் இடம்பெற்ற திருமலை திருப்பதி மிகவும் பழமையானது. அது வராஹக்ஷேத்ரம் (வராஹாத்ரி) என்று பெயர் பெற்றது. பெருமாள் க்ருதயுகத்திலே கேழலாய் அவதரித்து, ஹிரண்யாக்ஷனை அழித்த பிறகு ஓய்வெடுக்க எண்ணி தனிமையான அழகிய இடத்தை தேடி திருமலையில் கோயில் கொண்டான். பின்பு வெகு காலம் கழித்து கலியுகத்தில் ஸ்ரீநிவாசப் பெருமாள் திருமலைக்கு வந்து தவம்புரிய எண்ணி வராஹனிடம் அனுமதி கேட்டான். சிறிது இடம் கொடுத்தால் பின் ஊரையே வாங்கி கொள்வான் என்று தெரிந்து ஒரு நிபந்தனையுடன் வராஹன் ஒத்துக்கொண்டான். திருமலையில் முதலில் எதுவும் தனக்கே நடக்க வேண்டும் என்று நிபந்தனை இட்டான். ஸ்ரீநிவாஸனும் ஒத்துக்கொள்ள, இன்றும் திருமலையில் தினமும் காலையில் திருப்பாவை சாற்றுமுறை, ப்ரஸாதம் எல்லாமே முதலில் வராஹனுக்கு ஆனபிறகே வேங்கடவனுக்கு நடக்கிறது. பக்தர்களும் முதலில் வராஹனை ஸேவித்த பிறகே திருவேங்கடவனை தர்சிக்க செல்வது மரபு. ஸ்ரீநிவாஸன் திருமலைக்கு 'வந்து சேர்ந்த பெருமாள்' என்பதை நம்மாழ்வார் திருவாய் மொழியில், "பரன் சென்றுசேர் திரு வேங்கட மாமலை ஒன்றுமே தொழ நம்வினை ஓயுமே" (திருவாய் மொழி 3-3-8) என்று குறிப்படுகிறார்.

பேயாழ்வார் தம் மூன்றாம் திருவந்தாதியில் திருமலையை பற்றி பாடும்போது,

புரிந்து மதவேழம் மாப்பிடியோடூடி
திரிந்துசினத்தால்பொருது * - விரிந்தசீர்
வெள்ளகோட்டு முத்துதிர்க்கும் வேங்கடமே
*மேலொருநாள்
மண்கோட்டுக் கொண்டான்மலை

- மூன்றாம்திருவந்தாதி 45

என்று வியக்கிறார். அதாவது ஆண் யானை தன் காதலியான பெண் யானையுடன் அன்பின் மிகுதியாலே ஊடி, கோபப்பட்டு தந்தத்தால் மலையை குத்திப்பிளக்க அதனால் தந்தத்திலிருந்து முத்து உதிர்கிறதாம். இந்த வியத்தகு நிகழ்ச்சி நடக்கும் திருமலை, முற்காலத்தில் பூமிப் பிராட்டியை தன் தந்தத்தால் காத்த வராஹனின் மலை என்று ஆழ்வார், திருமலையை ஆதிவராஹனின் க்ஷேத்ரமாக பாடுகிறார்.

மேலும் நாம் இப்போது வாழ்வது ச்வேத வராஹ கல்பத்தில். ஒரு கல்பம் என்பது பிரமனின் ஆயுளில் ஒரு சிறு பகுதி. ச்வேதம் என்றால் வெண்மை. இது வெண்மையான பன்றியின் கல்பம்; ச்வேத வராஹமாகத்தான் பெருமாள் ஆதி திருவெள்ளறையில் காட்சிக் கொடுக்கிறான். இது திருவரங்கத்துக்கும் முற்பட்டது என்று புராணங்கள் கூறுகின்றன. இங்கு திருமால் வெண்கேழலாய் தோன்றியது ஒரு சுவையான வரலாறு.

இராமனுக்கு முற்பட்ட அரசனான சிபிச்சக்ரவர்த்தி ஒரு முறை தன் படைகளோடு திருவெள்ளறையில் தண்டு இறங்கினான். அப்போது ஒரு வெள்ளை பன்றி போக்குக் காட்டியது. அதை படை வீரர்கள் துரத்திச் செல்ல பன்றி ஒரு புதருக்குள் மறைந்தது. வியந்த அரசன் அருகில் தவம் புரிந்து கொண்டிருந்த மார்க்கண்டேய முனிவரை வினவ அவர் கூறியபடி புதருக்கு பாலால் மஞ்சனம் ஆட்டினான். உடனே எம்பெருமான் அங்கேயே ச்வேத வராஹனாய் காட்சி அளித்தான். இன்றும் புண்டரீகாக்ஷனாய் அருள் பாலிக்கின்றார். ஆதிவராஹனையே இத்திருத்தலம் தன்னுள் கொண்டபடியாலும் ஆதிதிருவெள்ளறை என்று வழங்கப்படுகிறது.

திருமங்கையாழ்வார் திருவெள்ளறையைப் பாடும்பொழுது,

மானவே லொண் கண்மடவரல்
மண்மகளழுங்கமுந்நீர்ப் பரப்பில்
ஏனமாகியன்றிருநிலமிடந்தவனே
.................திருவெள்ளறை நின்றானே

(பெரிய திருமொழி - 5 - 3- 5)

''பூமிப்பிராட்டி தண்ணீரில் மூழ்கிய போது ஏனமாய்ப் பிறந்து பூமியை இடந்து காத்த வராஹனே! திருவெள்ளறையில் நின்றவனே! எனக்கு அருள்புரிய வேண்டும்'' என்கிறார்.

ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலும், ஸ்ரீபாகவதத்திலும் அவதாரங்களை வரிசைப்படுத்திக் கூறும்போது, முதலில் வராஹாவதாரத்தையே எடுத்தார்கள். திருமங்கை மன்னனும், தோழுந்தூரைப்பாடும்பொழுது,

"எம்பெருமான், உம்பர் ஆளும் அரனே!
ஆதிவராகமுன்னானாய் "!:

(பெரிய திருமொழி 7.7.4.)

என்று வராஹன் கல்பத்தின் ஆதியிலேயே தோன்றியவன் என்று புகழ்கிறார்.

அது மட்டுல்லாமல் தசாதவதார பாட்டில் திருமங்கை ஆழ்வார் வராஹனை வர்ணிக்கும் போது

உலகேழினோடுமுடனே*
.............. ஆதிமுன் ஏனமாகி அரணாய மூர்த்தி........

(பெரிய திருமொழி 11-4-3)

என்று ஆறு மலையும், ஏழுகடலும் குளம்பல் அடங்கும்படி வளர்ந்த வராஹப்பெருமானே உலகுக்கு காரணம் என்கிறார்.

ஸ்ரீவில்லிபுத்தூர், தஞ்சை மாமணிக்கோயில், திருக்குருகூர் ஆகியவையும் ஆதிவராஹ க்ஷேத்ரங்களாக கொண்டாடப்படுகின்றன.

ஆதிவராஹன், பழமையானவன், மூத்தோன், உலகுக்கு காரணம் ஆகையால் அவனை தாம் கண்ட நல்ல புகலாக ஆழ்வார்கள் வழி காட்டினர்.

# மஹாவராஹன்

திருமாலின் பல்லாயிரம் நாமங்களுள் உலகம் முழுவதும் வியாபிக்கிறான் என்று பொருள்படும், 'விஷ்ணு' என்னும் நாமம் முக்கியமானது. பரம்பொருளை குறிக்கும் "ப்ரஹ்மம்" என்னும் சொல்லுக்கு மிகப்பெரியவன் என்று பொருள். இயற்கையான தன்மைகளாலும், குணங்களாலும், உருவத்தாலும் தானே மிகப்பெரியவன் என்பதை புரிய வைப்பதற்காக பரப்ரஹ்மமான விஷ்ணு வராஹனாய் அளவிட முடியாத உருவம் எடுத்துக் கொண்டான்.

காண்போர் கண்களையும் மனத்தையும் வியக்க வைக்கும் அவன் உருவத்தை கண்டவுடன் மஹரிஷிகளும் ஆழ்வார்களும் தங்கள் உள்ளத்தை வெளியிட்ட பாடல்களை பார்ப்போம்.

ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் பராசர மஹரிஷி வராஹனை வர்ணிக்கும் பொழுது,

ஸாமஸ்வர த்$_{4}$வநி: ஸ்ரீமான் ஜக$_{3}$ர்ஜ பரிக$_{4}$ர்க$_{4}$ரம்|
தத: ஸமுத்க்ஷிப்ய த$_{4}$ராம் ஸ்வத$_{3}$ம்ஷ்ட்ர்யா மஹாவராஹ:
ஸ்பு$_{2}$டபத்$_{3}$ மலோசன: ||
ரஸாதலாது$_{3}$ த்பல பத்ரஸந்நிப$_{4}$ : ஸமுத்தி$_{2}$தோ நீல
இவாசலோ மஹான்||

(ஸ்ரீவிஷ்ணுபுராணம் 1.4.25,26)

"வராஹ புருஷன் தன் கர்ஜனையால், ஸாம வேதத்வனிபோல் முழங்கிக் கொண்டு தன் கொம்பின் நுனியில் பூமியைத் தாங்கி பாதாள லோகத்தில் இருந்து, நீலோத் பலத்தின் இலை போன்ற



ஸ்ரீ மஹாவராஹன் - பேலூர்

கருநீலவர்ணத்தில் பெரும் உருவத்தோடு வெளியே வந்தார். மேலும் அவர் வாயிலிருந்து எழுந்த பெருமூச்சினால் தெறித்த தீர்த் திவலைகள் ஐந்தாவது லோகமான ஜனர் லோகத்தில் இருக்கும் ஸநந்தனன் முதலான யோகிகளை புனிதப்படுத்தின.'' என்கிறார்

"மஹாவராஹ: ஸ்பு$_2$டபத்ம லோசன:"

என்று வடமொழியில் சொன்னதை நம்மாழ்வார் தமிழில்

" பெருங்கேழலார் தம் பெருங்கண்மலர்ப் புண்டரீகம் நம்மேல் ஒருங்கே பிறழ வைத்தார்"

(திருவிருத்தம் 45)

என்று உரைத்தார். இருவருமே வராஹன் அனைத்திலும் பெரியவன் என்றும் தாமரைக் கண் படைத்தவன் என்றும் ஏகமனதாகப் பாடியுள்ளார்கள். வடமொழியும், தமிழும் இப்படி கைகோர்த்துச் செல்வதாலேயே நம் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் உபயவேதாந்தம் இரண்டு கண்கள் போலே என்கிறோம்.

வராஹனின் உருவ அளவை மற்றொரு ச்லோகத்தில்

" கு$_2$ரமத்$_4$ய க$_3$ தோயஸ்ய மேரு: கணகணாயதே"

(எவனுடைய கால் குளம்பல் அகப்பட்டமேரு கணகண என ஒலி எழுப்புகிறதோ) என்று வடமொழியில் உள்ளதை திருமங்கை ஆழ்வார் திருத்தெற்றியம்பலம் என்னும் திவ்யதேசத்தை பாடும்பொழுது,

சிலம்பினிடை சிறு பரல்போல் பெரியமேரு
திருக்குளம்பில் கணகணப்பத் திருவாகாரம்
குலுங்க ⁕ நிலமடந்தை தனை இடந்து புல்கிக்
கோட்டிடை வைத்தருளிய என்கோமான்
கண்டீர். (பெரிய திருமொழி 4-4-8)

(வராஹன் தன் திருக்குளம்பிலே, சிலம்பு என்னும் ஆபரணத்தில் அகப்பட்ட சிறுபரல் கல்போலே, மேருமலையே கண கண என்று ஒலிக்க திருமார்பில் எழுந்தருளி இருக்கும் ஸ்ரீ மஹாலக்ஷ்மி அசையப் பூமி பிராட்டியை இடந்து தன் கோரைப் பற்களிலே மாணிக்கம் அழுந்தினாப்போலே வைத்தான்! அவனே எனக்கு ஸ்வாமி) என்கிறார்.

மேரு மலை, குளம்பில் சிறுபரல்போல் அகப்பட வேண்டுமானால் அவ்வுருவத்தின் அளவை நம்மால் கற்பனைக்கூட செய்து பார்க்க இயலாது. வராஹனுக்கு இவ்வளவு பெரிய உருவத்தை எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியம் என்ன? என்பதை நம் முன்னோர்கள் பல வழிகளில் விளக்குகிறார்கள்.

ஒரு பொருளை நாம் தூக்கும் போது அப்பொருளை நம்மோடு ஒப்பிட்டால் அது எவ்வளவுக்கெவ்வளவு சிறியதாகவும் நாம் எவ்வளவுக்கெவ்வளவு பெரியதாகவும் இருக்கிறோமோ அத்தனை எளிதாக அனாயாசமாக தூக்கலாம். பொருளும் அலுங்காமல் குலுங்காமல் இருக்கும். வராஹன் பூமியை தூக்கும் பொழுது அதைவிடப் பன்மடங்கு வளர்ந்ததாலே ச்ரமமின்றித் தூக்கினார். பூமியும் அலுங்காமல் இருந்தது, என்பதை நம்மாழ்வார்

நான்றில ஏழ் மண்ணும் தானத்தவே ✱ பின்னும்

நான்றில ஏழ் மலை தானத்தவே ✱ பின்னும்

நான்றில ஏழ் கடல் தானத்தவே. ✱ அப்பன்

ஊன்றி இடந்து எயிற்றில் கொண்ட நாளே.

(திருவாய்மொழி 7-4-3)

"வராஹன் பூமியை தூக்கும் பொழுது மண்துகளும் அசையாமல், மலைகளும் பெயராமல், கடலில் தண்ணீரும் தளும்பாமல் பூப்போலே எடுத்து தன் கோரைப்பல்லில் வைத்தான்" என்று உள்ளம் உருக விவரிக்கிறார்.

பூமியையும் அதில் உள்ள எளியவர்களாகிய நம்மையும் தீங்கின்றி காப்பதிலே வராஹனுக்கு இருக்கும் ஊற்றத்தை நினைத்தாலே மயிர்க் கூச்செரிகிறது.

பெரிய உருவம் கொள்ள மேலும் ஒரு காரணம் உண்டு. நண்பர்களை விருந்துக்காக நம் வீட்டுக்கு அழைத்தால் அவர்கள் நால்வராக இருந்தாலும், சிறிதளவே உண்பவர்களாக இருந்தாலும், நாம் பத்துப்பேர் உண்ணும் அளவுக்கு சமைத்து வைக்கிறோம். இது விருந்தோம்பலின் பெருமை. வராஹனுக்கு அடியார்களை காப்பதில் இருக்கும் பேராதரவு காரணமாக தேவையானதைவிட பலமடங்கு பெரிய வடிவு கொண்டான்.

வராஹனின் பெரிய வடிவத்தை நோக்கும் பொழுது அவன் அடியார்களான நாம் மிகப் பெரியவனை சார்ந்திருக்கிறோம், அதனால் மலை போன்ற நம் வினைகள் பனிபோல் விலகிவிடும் என்ற நம்பிக்கையும் நிம்மதியும் ஏற்படும். நாம் கண்ட நல்லது வராஹனே என்பதற்கு இது ஒன்றே போதாதோ!.

# யக்ஞ வராஹன்

இயந்திரமாக ஓய்வில்லாமல் இயங்கும் இவ்வுலகத்தில் நமக்கு நிம்மதியையும் புத்துணர்ச்சியையும் தருவது பக்திமார்க்கம். உண்மையான அன்புடன் பகவானை சிந்தித்து வணங்கி வழிபடுதலே பக்தி. இறைவனை பூசிப்பது பக்தியில் முக்கியமான அங்கம். யாகம், ஹோமம், தவம், புஷ்பார்ச்சனம் எல்லாமே தேவனை பூசிப்பதற்காக செய்பவை. இறைவனுக்கு தொண்டு செய்யும் இச் செயல்களால் நம் அனாதிகாலமான வினைப்பயன்கள் விலகும். "யஜ" என்றால் தேவபூஜை என்று பொருள்படும்.யாகம், யக்ஞம் என்றாலே தேவபூஜை என்று பொருள். சுயநலம் இல்லாமல், நாம் செய்தோம் என்கின்ற இறுமாப்பும் இல்லாமல் தொண்டு புரிவதே சாலச் சிறந்தது. இங்கு ஓர் ஐயம் எழும். நாம் செய்ததை, எப்படி நாம் செய்யவில்லை - இறைவனே செய்வித்தான் என்று நம்ப முடியும். இந்த ஐயத்தை கண்ணன் கீதையில் தீர்த்து வைக்கிறான்.

"அஹம்ஹி ஸர்வ யக்ஞாநாம் போ$_4$க்தா ச ப்ரபு$_4$ரேவ ச"

(உலகில் செய்யப்படும் வேள்விகளும், வேள்வியின் பயனை உண்பவனும், வேள்வியின் தலைவனும், வேள்விக்கு பயன் கொடுப்பவனும் எல்லாம் நானே) என்கிறான் கண்ணன்.

யக்ஞமும், அதைச் செய்யும் நாமும், அவனுடைய உடைமைகள். செய்ய வேண்டும் என்ற எண்ணத்தை

ஊட்டியவனும் அவன். இப்படி இருக்கையில் எந்த தொண்டினையும் நாமே செய்தோம் என்று எண்ண வழியே இல்லை, என்று கீதையில் கண்ணன் தெளிவாக விளக்கி இருக்கிறான். புத்தகத்தில் விளக்கப்படும் உயர்ந்த கருத்துக்கள் புரிவது கடினம். நேரே கண்டால் எதுவும் சடக்கென்று புரியும். ஆகையால் வராஹப்பெருமான் தன் பெரிய உருவத்தாலே தானே எல்லா விதமான யாகங்களும் யக்ஞங்களும் என்று தன் அவதாரத்தின்போது தன்னை யக்ஞவராஹனாக ரிஷிகளுக்கு காட்டி கொடுக்க அவர்கள் அக்காட்சியை படம் பிடித்தாப் போலே விளக்குகிறார்கள். ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் பராசரர்,

பாதே$_3$ஷு வேதா$_3$ஸ்தவ யூபத$_3$ம்ஷ்ட்ர த$_3$ந்தேஷு
யக்ஞாஸ்சிதயஸ்ச வக்த்ரே|
ஹுதாச ஜிஹ்வோऽஸி தநூருஹாணி த$_3$ர்பா$_4$: ப்ரபோ$_4$
யக்ஞபுமாம்ஸ்த்வமேவ||

(ஸ்ரீ விஷ்ணுபுராணம் 1-4-32-36)

என்று தொடங்கி யக்ஞ வராஹனின் திருமேனியை வர்ணிக்கிறார். வராஹனின் நான்கு கால்களே நான்கு வேதங்கள் அவன் கோரைப் பற்களே யாகத்து யூபஸ்தம்பம் ஆகும். யாகத்தில் கொடுக்கப்படும் ஹவிஸ்ஸை உண்பதால் அவன் பற்களே யாகங்கள். சிவந்து நீண்டு இருக்கிற நாக்கு வேள்வித்தீ, ரோமங்கள் தர்ப்பங்கள். யக்ஞத்திற்குக் காலமான பகலும் இரவும் அவனுடைய இரண்டு கண்கள், யாகங்களில் நெய்விட

பயன்படும் கருவியான 'ஸ்ருக்' அவன் மூக்கு, இப்படி யக்ஞ புருஷனாக இருந்து உலகத்துக்கெல்லாம் மங்களம் அளிக்கிறான்.

மேலும் வராஹனே யக்ஞம் முதலானவற்றால் அடையப்படுபவன் என்பதை பொய்கை ஆழ்வார் தம் முதல் திருவந்தாதியில் விளக்குகிறார்.

செவிவாய் கண் மூக்கு உடலென்றைம்புலனும் * செந்தீ
புவிகால் நீர் விண் பூதமைந்தும் * அவியாத
ஞானமும் வேள்வியும் நல்லறமும் என்பரே, *
ஏனமாய் நின்றார்க்கியல்வு.

(முதல் திருவந்தாதி - 12)

கண், காது, மூக்கு முதலான ஐம்புலன்கள், பஞ்ச பூதங்களால் ஆன உடல், ஞானம் முதிர்ந்த பக்தி, யாகம், யக்ஞம், ஹோமம் முதலிய கர்மங்கள், பகுத்தறிவு, ஆத்ம ஞானம், ஆகியவை வராஹனை அடைவிக்கும் சிறந்த வழிகள். இவைகளை ஸாதனமாகக் கொண்டு பெருமானை அடையாலாம் என்ற பொருள்பட முதல் உரை. உரையாசிரியர், இப்பொருளை விட உயர்ந்த கருத்து வெளிப்படும்படி அடுத்துப் பொருள் கூறுகிறார்.

வராஹன் எதையுமே எதிர்பார்க்காமல் ஆசையோடு நம்மை காக்க காத்திருக்கும்போது உடலும், பக்தியும், யக்ஞமும், பகுத்தறிவும் அவனை அடைவிக்கும் வழிகள் என்று

நம்புகிறார்களே! அறிவில்லாதவர்கள். நான் கண்ட நல்லது என்று நம்மாழ்வார் சொன்னபடி அவனே அவனை அடைவிக்கும் நல்லது. வேறொன்றல்ல. யக்ஞ வராஹனை அடைய யக்ஞம் வழியல்ல. வராஹன் திருவடிகளே சிறந்த வழி, என்று நாம் உணரவேண்டும். மற்றும் யாகம் யக்ஞம் என்றால் ஒரு தேவதைக்காக அக்னியில் தயிர், நெய் போன்ற பொருள்களை ஆஹுதியாக கொடுத்து, இவை என்னுடையவை அல்ல, உன்னுடையவை, என்ற வைராக்யத்தோடு இருப்பது. யக்ஞ வராஹனிடத்திலும் நம் மனம், கண், காது முதலான புலன்களை ஸமர்ப்பித்து, இவைகள் என்னுடையவைகள் அல்ல உன்னுடையவை என்ற உறுதியோடு இருக்க வேண்டும். அவன் திருமேனிக்கு உண்டான சக்தியால் நம் புலன்கள் எளிதாக கட்டுப்பட்டு ஆத்ம சிந்தனைப் பிறந்து பக்தி மலரும்.

மற்றொரு வழியால் வராஹனை அடையமாட்டோம். வராஹனிடம் கையேந்தி மற்றொரு தாழ்ந்த பயனை அடையமாட்டோம். அவன் திருவடி பலத்தாலே அவனை அடைவோம். இதுவே ஆழ்வார் காட்டிய நல்லது.

## லக்ஷ்மீ வராஹன்

பூமாதேவியை காப்பதற்காக வராஹன் அவதரித்திருந்தாலும் அவன் எப்போதும் ஸ்ரீமஹா லக்ஷ்மியை விட்டு பிரியாதவன். ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் பராசரர்,

நித்யைவேஷா ஜக$_3$ன்மாதா விஷ்ணோ: ஸ்ரீ: அநபாயி நீ|
தே$_3$வத்வே தே$_3$வதே$_3$ஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ||

என்று உலகத்துக்கே தாயாகவும் விஷ்ணுவின் திரு மார்பை விட்டுப்பிரியாதவளாகவும் இருக்கும் ஸ்ரீ தேவி, அவன் எப்படி பிறந்தாலும் கூடவே பிறந்து அருள் பாலிக்கிறாள் என்கிறார்.

இக்கருத்தை வெளிப்படுத்தவே வராஹப்பெருமான் திருவிடவெந்தை என்னும் தொண்டைநாட்டுத் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ளான்.

சென்னையிலிருந்து திருக்கடல்மல்லை (மகாபலிபுரம்) செல்லும் வழியில் அமைந்துள்ளது திருவிடவெந்தை. இதன் தல வரலாறு மிகவும் சுவையானது. முன் யுகத்தில் மேகநாதன் என்னும் அரசனின் புதல்வனான பலி அரக்கர்களுக்கு உதவியாக தேவர்களுடன் யுத்தம் செய்து அவர்களை வென்றான். அந்த பாவம் போக இத்திருத்தலத்திற்கு வந்து பெருமானைக் குறித்து தவம் செய்ய திருமாலும் வராஹருபத்திலே, வராஹ தீர்த்தம் என்னும் திருக்குளத்திலே அவனுக்கு காட்சியளித்தார்.

இவ்வரலாறு இவ்வாறு இருக்க, ஸரஸ்வதி நதிக்கரையில் தவம் புரியும் காலவரிஷி என்பவர் ஓர் ஆண்டில் ஸ்ரீதேவியின் அம்சமாக 360 பெண்களைப் பெற்றார். அவர்களுக்கு திருமண வயது வந்தவுடன் மணம் முடிக்க முயற்சியெடுத்து இத்திருத்தலத்திற்கு வந்து வரம் தரும் வராஹனை வேண்டினார். இறைவனும் ஒரு ப்ரஹ்மசாரி வடிவில் வந்து ரிஷியின் 360 பெண்களையும் தினம் ஒரு பெண்ணாக திருக்கல்யாணம் செய்து கொண்டு கடைசி நாளில் அனைவரும் பார்க்க 360 பெண்களையும் ஓர் உருவாக்கி தன் இடது மடியில் வைத்து தர்சனம் தந்தார். அவளே திருமகள். திருவான லக்ஷ்மியை தன் இடது பக்கத்தில் வைத்த படியால் 'திருஇட எந்தை' என்று இத்திவ்யதேசத்துக்குப் பெயர் வழங்கலாயிற்று. பெருமாளுக்கும் ஸ்ரீ லக்ஷ்மீ வராஹர் என்று ப்ரஸித்தமாக திருநாமம் ஏற்பட்டது. இவ்வூரில் எழுந்தருளியுள்ள உத்ஸவ மூர்த்திக்கு 'நித்யகல்யாணப்பெருமாள்' (தினமும் கல்யாணம் செய்து கொள்பவர்) என்ற திருநாமம் ஏற்பட்டது. எல்லாப் பெண்களும் சேர்ந்து ஓர் திருமகளாக ஆனபடியால் இவ்வூர்த் தாயாருக்கு "அகிலவல்லி நாச்சியார்" என்ற திருநாமம் பிறந்தது.

இடவெந்தையைப் போல வலவெந்தைப் பெருமாளும் இருப்பது தெரியுமா? திருவிடவெந்தையில் உள்ள வராஹமூர்த்தியை மாமல்லபுரத்து மன்னன் ஒருவன் பக்தியோடு வந்து தினமும் தர்சித்துச் செல்வான். வெகுதூரம் வருவதால் பக்தன் தினமும் படும் கஷ்டத்தைக் கண்டு பொறுக்காத வராஹன் மாமல்லபுரத்திலேயே கோயில் கொண்டு தனது வலது

புரத்தில் ஸ்ரீ மஹாலக்ஷ்மியோடு ஸேவை ஸாதிக்கிறான். இந்த லக்ஷ்மீ வராஹனுக்கு "திருவலவெந்தை" என்ற திருநாமம் வழங்கப்படுகிறது.

திருஇடவெந்தை லக்ஷ்மீ வராஹனை பத்து பாசுரங்களால் மங்களா சாஸனம் செய்யும் திருமங்கை ஆழ்வார் ஒரு உயர்ந்த கருத்தை நமக்கு புரிய வைக்கிறார். இதை உணர்ந்து நடப்போர்க்கு ஒரு குறையும் இல்லை.

திவளும் வெண்மதிபோல் திருமுகத்தரிவை
செழுங்கடலமுதினிற் பிறந்த
அவளும் நின்னாகத்திருப்பதுமறிந்தும் ஆகிலுமாசை
விடாளால்
குவளயங் கண்ணி கொல்லியம் பாவை சொல்லுநின்தாள்
நயந்திருந்த
இவளை உன்மனத்தால் என்நினைந்திருந்தாய்
இடவெந்தை யெந்தைபிரானே.
(பெரிய திருமொழி - 2,7 ,1...)

இப்பாசுரம் திருமங்கை ஆழ்வார் பெண்பாவனையில் (நாயிகா பாவத்தில்) பாடுவது. ஆழ்வார் என்னும் தலைமகள், தலைமகனான பெருமானை அடைய முடியாமல் துடிப்பதைக் கண்ட ஆழ்வாரின் தாய் மனவருத்தப்பட்டு திருவிடவெந்தைப் பெருமானிடம் முறையிடுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. "வராஹப்பெருமானே என் மகள் உன்மேல் மிக்க காதலால் துன்புறுகிறாள். அவள் காதலை குறைப்பதற்காக 'ஏற்கனவே



ஸ்ரீ வராஹப்பெருமாள் - திருவலவெந்தை (மஹாபலிபுரம்)

திருமணமாகி ஸ்ரீ மஹாலக்ஷ்மியை திருமார்பிலேயும் இடது பக்கத்திலும் வைத்துக் கொண்டு இருக்கிறாய்' என்று சொன்னேன். அவள் உன் கோயில் வந்து உன்னை திருமகளோடு தர்சித்த பிற்பாடும் தன் ஆசையை விட மறுக்கிறாள். இப்படி ஏங்கும் என் மகளான பரகால நாயகியைப் பற்றி நீ உன் மனத்தில் என்ன நினைக்கிறாய்?'' என்று தாயார் வினவுகிறாள். உலக இயல்பில் கல்யாணமான ஆண்மகனை மற்றொருத்தி காதலிக்க மாட்டாள். ஆனால் இங்கு பரகால நாயகி லக்ஷ்மியை வராஹனிடம் கண்டபின்பும் காதலித்தாள் என்றால் இது உலக இயல்பிலிருந்து மாறுபட்ட தெய்வீகக் காதல். இதுவே பக்தி, எனப்படுகிறது. மேலும் ஸ்ரீ வைஷ்ணவ மரபுப்படி திருமால் ஒருவனே புருஷன். ஸ்ரீதேவி நாச்சியார் தொடக்கமாக நம் ஈறாக மற்ற ஆன்மாக்கள் அனைவரும் அவனுடைய மனைவிகளே. பெருமாளிடம் லக்ஷ்மிக்கு எத்தனை அனுபவமும், உரிமையும் உண்டோ அத்தனையும் ஒவ்வொரு ஆத்மாவுக்கும் உண்டு.

தன் தாயாருக்கு பரகால நாயகி என்ன பதில் சொல்லியிருப்பாள்!

"ப்ரஹ்மசாரி வராஹனிடம் எனக்கு நம்பக்கையில்லை. அருகில் லக்ஷ்மீ உள்ளதைக் கண்டபிறகே பெருமாளுடன் என் திருமணம் நிச்சயம் நடக்கும் என்ற நம்பிக்கையே ஏற்பட்டது'' என்றிருப்பாள். சரணாகதி தத்வமே பிராட்டியை முன்னிட்டுப் பெருமானைப் பற்றினால் பலன் நிச்சயம் உண்டு என்பதே. ஆகையால் நான் கண்ட நல்லது வராஹன். நான் நிச்சயமாக கண்ட நல்லது லக்ஷ்மீவராஹன்.

# கோல வராஹறன்

திருமால் ஸம்ஸாரிகளை தன்பால் ஈர்த்து பக்தியை வளர்க்க பல முயற்சிகளை எடுக்கிறான். முதலில் அறிவையும், வேதங்களையும் கொடுத்து உண்மைப் பொருளை உணரச் சொன்னான். அது புரியாதபோது தானே பிறந்து முன் உதாரணமாக வாழ்ந்து காட்டினான். அதிலும் திருந்தாத போது ஆழ்வார்களையும், அடுத்து ஆசார்யர்களையும் பிறப்பித்து உலகோர்க்கு உபதேசிக்கச் செய்தான். நம் மனது அதிலும் ஈடுபடாவிடில் கடைசி ஆயுதத்தை பயன்படுத்துகிறான். அதுவே அவன் வடிவழகு. அவன் திருமேனி அழகில் ஈடுபட்டு தோற்காதார் உண்டோ! எதற்கும் மயங்காத கல் நெஞ்சம் படைத்தோரும் அவனுடைய மைவண்ண நறும் குழல் அழகையும், பறித்துக் கொண்டு போகும் நெற்றியையும், கோல நீள் கொடி மூக்கையையும், தாமரை கண்களையும், கனிவாயையும், நீலமேனியையும், நான்கு தோள்களையும் கண்டு உருகுவர். வேடனான குஹனும், அரக்கியான சூர்ப்பணகையும், குரங்கினத்தில் பிறந்த தாரையும் இராமனின் வடிவழகில் தோற்றார்கள்.

அவதார காலத்தில் வராஹப் பெருமானின் வடிவழகை வர்ணிக்க முடியாமல் ரிஷிகள் வாயடைத்துப் போனார்கள். ஆனால் ஆழ்வார்கள் அவன் அருளாலே ஞானமும், பக்தியும் பெற்று, அவனே தன் அழகை வெளிப்படுத்த அதைக் கண்டு பல பாசுரங்களால் வராஹனின் ஓரோர் அவயவத்தின் அழகையும் சித்திரம் வடிப்பது போல் எழுதி வைத்தார்கள். அத்னை ஈண்டு அனுபவிப்போம்.

'கோல' என்றால் அழகு 'கோல வராஹன்' என்றால் வடிவழகிய வராஹன் என்று பொருள். வராஹனின் விசேஷ கடாக்ஷம் பெற்றிருந்த நம்மாழ்வார் தன் திருவாய்மொழியில் அவனை ஒரு நாளும் பிரிய மறுக்கிறர்.

கோலமலர்ப் பாவைக்கன்பாகிய என்னன்பேயோ
நீலவரையிரண்டு பிறைகவ்வி நிமிர்ந்ததொப்பக்
கோலவராக மொன்றாய் நிலம் கோட்டிடைக்
கொண்டவெந்தாய்
நீலக் கடல் கடைந்தாய் உன்னைப் பெற்றினிப்
போக்குவனோ

(திருவாய்மொழி - 10-10-7.)

"அழகிய ஸ்ரீமஹாலக்ஷ்மியிடத்தில் நீ பேரன்பு கொண்டபடியால் அவள் நிழலில் ஒதுங்கிய என்னிடமும் அன்புக் காட்டுபவனே! ஓர் அஞ்ஜன கிரி (மையால் உருவான கருநீல மலை) நிலாவின் பிறை இரண்டைக் கவ்விக் கொண்டு ஓங்கி வளர்ந்து நிமிர்ந்தாப் போலே மிகவும் அழகியதாய் ஒப்புமை சொல்ல முடியாததான வராஹமாய் பூமிப்பராட்டியை கோரைப்பல்லிலே வைத்த வராஹனாய் என்னையும் ஸம்ஸாரக்கடலில் நின்றும் தூக்கி விடுவாய் என்று நம்பிக்கை ஊட்டும் ஸ்வாமியே! பாற்கடல் கடைந்து அடியார்களைக் காத்தவனே! நீ கிடைத்தபின் நான் உன்னை நழுவ விடுவேனோ!" என்று வராஹனிடம் ஆழ்வார் ஈடுபடுகிறார். பூமிப் பிராட்டியைக் காக்க வராஹனாகப் பிறந்தாய். ஸ்ரீ மஹாலக்ஷ்மியைப் பெறப் பாற்கடல் கடைந்தாய். ஆழ்வாராகிய என்னைக்காக்க இரண்டையும் செய்த உன்னை விட்டுவிடுவேனோ என்கிறார்.

இப்பாட்டில் "கோலவராஹன்" என்று அவன் வடிவழகை வெளியிடுகிறார். வராஹன் நீல மேனியோடு விண்ணைமுட்டு மளவும் உயர்ந்து நின்று வளர்ந்து இரண்டு கோரைப் பற்களாலே பூமியை இடந்தான். இதற்கு உவமை சொல்லும் ஆழ்வார் ஓர் உயர்ந்த கருநீல மலை, சந்திரனின் இரண்டு பிறைகளை ஒடித்து கவ்விக்கொண்டு இருந்தாப்போலே இருந்ததென்கிறார். சந்திரனில் ஓர் சிறு கருப்பு திட்டுக் காணப்படும். கரும் பச்சை வர்ணத்து பூமிப்பராட்டி, வராஹனின் வெளுத்த எயிற்றின் ஒரு மூலையில் ஒட்டிக்கொண்டு இருந்து, நிலவின் கருப்புத் திட்டுப்போல் விளங்கிற்று. நாம் கண்ணை மூடிக்கொண்டு மனதைக் கற்பனை என்னும் குதிரையில் ஏற்றி தட்டிவிட்டால் இப்பாட்டின் பொருள் புரிந்து வராஹனின் வடிவழகும் நம் மனத்தை நிறைக்கும்.

பெரியாழ்வார் வராஹனின் அழகை மற்றொரு விதத்தில் சித்தரிக்கிறார்.

வானத்தெழுந்த மழைமுகில் போல் # எங்கும்
கானத்து மேய்ந்து களித்துவிளையாடி #
ஏனத்துருவாய் இடந்தவிம் மண்ணினை #
தானத்தேவைத்தானுலின்று முற்றும்
தரணியிடந்தானாலின்று முற்றும்

(பெரியாழ்வார் திருமொழி 2.10.9)

"வானத்தில் நீர்கொண்டு எழுந்து மழைபொழியக் காத்திருக்கும் கருத்த மேகம் போலே வடிவு படைத்த வராஹன் காட்டிலே எல்லா இடங்களிலும் எதிர்ப்பாரில்லாமல் திரிந்து கோரைக் கிழங்கு முதலியவற்றை அமுது செய்து, செருக்குடன்

விளையாடி, பூமியை ப்ரளய ஸமுத்ரத்தில் இருந்து இடந்தெடுத்து தன் இடது பக்கத்தில் வைத்தான். ஆனால் நம்மை விரஹக்கடலில் தள்ளிவிட்டான்'' என்கிறார். கார்மேகம், கண்டவர்களின் மனவெப்பத்தை போக்கும். பாகு பாடு இல்லாமல் நிறைய பொழிந்து வள்ளல் தன்மையைக் காட்டும். ஆகாயம் முழுக்க மிதக்கும். பளிச்சிடும் மின்னலோடு கூடி இருக்கும். அது போலவே வராஹனை கண்டவர்கள் தாபம் தொலைந்து குளிர்வார்கள். உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற பாகு பாடு இல்லாமல் கருணையைப் பொழிவான். காடு முழுவதும் ஓடுவான். பளிச்சிடும் பிராட்டியோடு கூடியிருப்பான். மேகத்தைக் கண்டால் சிறியோரும், பெரியோரும் குதியாட்டம் போடுவர். வராஹனைக் கண்டால் அறிவிலியும், பண்டிதனும் குதூகலிப்பர். பன்றியின் அழகு பாமரனையும் உருக்கும்.

பன்றிக்கு அழகுண்டோ என்ற ஐயம் எழலாம்! ஸ்ரீமன் நாராயணன் எதுவாக பிறந்தாலும் தன் பெருமைகளிலும் குணங்களிலும் ஒன்றும் குறையாமல் பிறக்கிறான் என்கின்றன, வேதங்களும் கீதையும். பன்றிக்கு தலை மயிர் (கேசம்) அழகாக இருந்து பார்த்திருக்கிறோமா! ஆனால் நம்மாழ்வாரோ ''கேழல் ஒன்றாகி இடந்த கேசவன்'' (திருவாய்மொழி - 1-9-2) என்று பன்றியின் கேசத்தைக் கொண்டாடுகிறார். திருமங்கை ஆழ்வார் ஒருபடிமேலேபோய் ''கள்ளார்துழாயும்'' (பெரிய திருமொழி 11-7-6) என்று உலகில் எங்கு எந்த மலரை பார்த்தாலும் வராஹனின் கேசத்துக்கு சூட்ட வேண்டும் என்கிறார். எத்தனை சொல்லி என்? கோல வராஹனின் அழகு அழகுதான். ''நாம் கண்ட நல்லது'' அழகாகவும் இருக்கும் போது அவன் திருவடிகளைப் பற்றக் கசக்கிறதா? கரும்புத் தின்ன கூலிக் கொடுப்பாரோ!

# வராஹ நரஸிம்ஹன்

பகவான் செய்தருளிய அவதாரங்களில் சிங்க உருவும், மனித உருவும் கலந்திருந்தபடியால் நரஸிம்ஹாவதாரத்திற்கு தனிச்சிறப்பு.

"ந்ரு ஹரி தசயோ : பச்யந் ஔத் பத்திகம் க$_4$டனாத்$_3$ பு$_4$தம்"

என்று பராசரபட்டர் பாடியது போல சேராத இரண்டைச்சேர்த்தார் நரஸிம்ஹன். பாலையும் சர்க்கரையையும் கலந்து சாப்பிட்டவன், தனித்தனியே சாப்பிட ரஸிக்க மாட்டான். மனிதனும், சிங்கமும் ஒன்றியதே இத்தனை இன்பம் பயக்கும் என்றால் திருமாலின் இரண்டு அவதாரங்களே கலந்து ஒருருக்கொண்டால் அதன் பெருமை சொல்லொணாது. வராஹாவதாரமும், நரஸிம்ஹாவதாரமும் கலந்து வராஹ நரஸிம்ஹனாய், விசாகப்பட்டிணத்திற்கு அடுத்த ஸிம்ஹாசலம் என்னும் திவ்ய க்ஷேத்ரத்தில் தர்சனம் கொடுக்கிறான். பூமிப்பிராட்டியைக் காக்கக் பிறந்த வராஹனும், பக்த ப்ரஹ்லாதனைக் காக்கப் பிறந்த நரஸிம்ஹனும் ஒரு உரு எடுத்தது சுவையான வரலாறு.

"ஓம் நமோ நாராயணாய" என்னும் திருவெட்டெழுத்தை ஓதிய ப்ரஹ்லாதனிடம் வெறுப்புக்கொண்ட அவன் தந்தையான ஹிரண்யன், அவனைக் கடலில் தள்ளி, மலையை உருட்டி அழுத்தச்சொல்லி ஆணையிட்டான். அஸுரர்களும் அவ்வண்ணமே செய்ய சிறுவனான ப்ரஹ்லாதன் சிறிதும் கலங்காமல் சிரித்த முகத்தோடு தண்டனைகளை ஏற்றுக்

கொண்டான். உருண்டோடி வந்த மலை அவனை அழுத்தி அழிக்கப் பார்த்தது. அப்போது பெருமாள் வராஹநரஸிம்ஹ ரூபத்தோடு தோன்றி தன் எயிற்றினால் மலையைக்குத்தி எடுத்து தள்ள, குழந்தை தப்பித்தது. ப்ரஹ்லாதன் வராஹ நரஸிம்ஹனை துதித்து அங்கேயே கோயில் கொள்ளும்படி வேண்டினான். அவன் வேண்டுதலுக்கு இணங்க இறைவன் க்ருதயுகம் முழுவதும் அங்கேயே ஸேவை சாதித்தான். ப்ரஹ்லாதனே இவ்விடத்தில் முதலில் கோயில் எழுப்பியவன். ப்ராஹ்லாதனுக்கு பின் அவன் பேரனான மஹாபலி சக்ரவர்த்தி பிறந்து, அவனுக்காக த்ரிவிக்ரமாவதாரமும் முடிந்தது. அடுத்த யுகமான த்ரேதாயுகத்தில் ஸிம்ஹாசலக் கோயில் சிதைந்துபோய் பெருமாளும் மறைந்தே இருந்தான். அப்போது சந்திர வம்சத்தில் பிறந்த புரூரவஸ் என்னும் அரசன் இத்திருத்தலத்திற்கு வந்து வராஹ நரஸிம்ஹனின் அருளாலே அவனைக் கண்டெடுத்தான். உடனே கோயிலை நிர்மாணிக்க எண்ணி, எம்பெருமானைச் சுற்றி மண்ணைத் தோண்டினால், அதற்குள் அசரீரி வாக்கு எழுந்து, "என்னை முழுவதுமாக வெளிபடுத்த வேண்டாம். ஆண்டு முழுவதும் என்னை சந்தனத்தால் மறைத்து வைகாசி மாதம் வளர்பிறை மூன்றாம் நாள் (அக்ஷய த்ருதீயை) மட்டும் சந்தன காப்பை களைந்து எல்லோரும் சேவிக்கும்படி செய்", என்று ஆணையிட்டது. மன்னனும் அது போலவே ஏற்பாடு செய்து, தான் தோண்டிய மண்ணின் அளவுக்கு சந்தனக் காப்பு சாத்தினான். இம்மரபு இன்றுவரை நடைபெற்று வருகிறது.

இரண்டு உருவம் கலந்த திருமேனியில் உள்ளம் கனிந்த ஆழ்வார்,

"வல்லெயிற்றுக் கேழலுமாய் வாளெயிற்றுச் சீயமுமாய்

எல்லையில்லாத் தரணியையும் அவுணனையுமிடந்தானூர்

.......... மதிளரங்கமென்பதுவே"

(பெரியாழ்வார் திருமொழி - 4-8-8)

"பூமியைக் காக்க வலிய கோரைப் பற்களுடன் வராஹமாயும், ஹிரண்யனை அழிக்க கூர்மையான வாள்போன்ற பற்களை உடைய சிங்கமாகவும் பிறந்தவன் வாழும் திருவரங்கம்" என்கிறார்.

பெருமானின் ஆணைப்படி மன்னனும் கோயில் கட்டி வைத்தான். வராஹ நரஸிம்ஹனும் இன்று வரை ஸேவை சாதிக்கிறான். வராஹனையோ நரஸிம்ஹனையோ தனித்தனியே பற்றினாலே மோக்ஷம் திண்ணம். இரண்டும் சேர்ந்து இருக்கும் வராஹ நரஸிம்ஹனோ நாம் கண்ட இரட்டை நல்லதாக இருந்து வாழ்விப்பான்.

## பூவராஹன்

திருமால் கோயில் கொண்டிருக்கும் திவ்யதேசங்களை அவன் அங்கு தோன்றிய அடிப்படையில் பலவிதமாக பிரிப்பர்கள். அவை ஸ்வயம்வ்யக்தம் (தானே தோன்றியது), திவ்யம் (தேவர்களால் ப்ரதிஷ்டை செய்யப் பட்டது), ஆர்ஷம் (முனிவர்களால் ஸ்தாபிக்கப்பட்டது), மானுஷம் (சாதாரண மனிதர்கள் ஸ்தாபித்தது) எனப்படும்.

இவற்றில் ஸ்வயம் வ்யக்தங்களாய் எட்டு க்ஷேத்ரங்கள் கொண்டாடப்படுகின்றன. வடக்கே உள்ள பதரீகாச்ரமம், சாளக்கிராமம், நைமி சாரண்யம், புஷ்கரம், மற்றும் தெற்கே உள்ள திருவேங்கடம், திருவரங்கம், வானமாமலை, ஸ்ரீமுஷ்ணம் அகிய திவ்யதேசங்களில் பெருமாள் தானே ஆசை கொண்டு ஆவிர்பவித்தான். இவற்றுள் பூவராஹ பெருமாள் ஸேவை சாதிக்கும் திருத்தலமே ஸ்ரீ முஷ்ணம். "ச்ரியம் முஷ்ணாதி இதி ஸ்ரீ முஷ்ணம்" என்றும், பூமிப் பிராட்டியை தண்ணீரின் மேல் பரப்பு வரை முட்டியெடுத்ததால் திருமுட்டமென்றும் வழங்கப்படுகிறது. ஸ்ரீமுஷ்ணத்தில் மூலமூர்த்தி முழுவதும் ஸாலக்ராம திருமேனியோடே மேற்கு நோக்கி நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார். முகம் தெற்கு நோக்கித் திரும்பியுள்ளது. அஸுரனை அழித்து பூமிப்பிராட்டியைக் காத்த இன்பம் பொங்க வெற்றிப் பெருமிதத்தோடே இரு கைகளையும் இடுப்பில் வைத்துக் கொண்டு கம்பீரமாக ஸேவை சாதிக்கிறார். உத்ஸவர் யக்ஞ வராஹமூர்த்தி, ஸ்ரீதேவி பூதேவியுடன் ஸேவை

சாதிக்கிறார். அருகில் ஆதி வராஹ மூர்த்தியும் உள்ளார். தனிக்கோயில் நாச்சியார் ஸ்ரீ அம்புஜவல்லித் தாயார். பூதேவியை கடலுக்குள் இருந்து காத்து வெளியே கொண்டு வந்து தண்ணீரில் மிதக்க விட்ட உடன் பூதேவியின் ப்ரார்த்தனைக்கு இணங்க பெருமாள் தங்கிய இடமே ஸ்ரீ முஷ்ணம். அதனாலேயே பூவராஹன் என்ற திருநாமம் பெற்றான்.

நம் ஸம்ப்ரதாயத்திற்கு ஸ்ரீ வைஷ்ணவம் என்று பெயர். ஸ்ரீ என்று கொண்டாடப் படும் பிராட்டியை முன்னிட்டுக் கொண்டே விஷ்ணுவின் திருவடிகளைப் பற்ற வேண்டியது மரபு. இராமனைப் பற்ற ஸ்ரீதேவியின் அவதாரமான ஸீதையையும், வராஹனைப் பற்ற பூமிதேவியையும், கண்ணனைப் பற்ற நீளா தேவியின் அவதாரமான நப்பின்னைப் பிராட்டியையும் முன்னிட வேண்டும். இதன்படி வராஹன், பூவராஹனாக அடியார்கள் தன்னை எளிதாகப் பற்ற ஏற்ற நிலையில் ஸ்ரீமுஷ்ணத்தில் ஸேவை சாதிக்கிறார்.

திருமாலுக்கு ஸ்ரீதேவியை விட பூதேவியிடம் காதல் மிக்கிருக்கும் என்பதை ஆழ்வார்கள் பல பாசுரங்களில் வெளியிட்டுள்ளார்கள்.

நம்மாழ்வார்,

"கிடந்திருந்து நின்றளந்து கேழலாய்க் கீழ்புக்
கிடந்திடும்✻ தன்னுள் கரக்குமுமிழும்✻
தடம்பெருந்தோளாரத் தழுவும் பாரென்னும்
மடந்தையை✻ மால் செய்கின்றமால் ஆர்காண்பரே?

(திருவாய்மொழி- 2-8 - 7)

என்கிற பாசுரத்தில் பெருமாள் கிடப்பதும், அமர்வதும், நிற்பதும் பூமியிலே. பூமியை மஹாபலி பறித்துச் சென்ற பொழுது த்ரிவிக்ரமனாக அளந்து மீட்டது, பூமியை ஹிரண்யாக்ஷன் மறைத்து வைத்தப்போது இடந்தெடுத்தது, பூமிக்கு ப்ரளய ஆபத்து வந்தபோது வயிற்றிலே வைத்துக் காத்து, பின்பு ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் உமிழ்ந்தது, என்று பூதேவியை தன் மடியில் அமர்த்தித் தோள்களை ஆறத் தழுவும் திருமாலுக்கு அவளிடம் இருக்கிற பித்து எவருக்கும் புரியாது என்கிறார்.

ஆண்டாளும் நாச்சியார் திருமொழியில்

"பாசிதூர்த்துக் கிடந்த பார்மகட்கு✻, பண்டொருநாள்
மாசுடம்பில் நீர்வாரா மானமிலாப் பன்றியாம்"

(நாச்சியார் திருமொழி - 11 - 8)

என்கிறபாடலில் பூமிப் பராட்டியின் முக்கியத்துவத்தை வெளியிடுகிறாள். ஆண்டாளே பூமியின் அவதாரம்தானே. வெகுநாள் தண்ணீருக்குள் அழுந்தி இருந்ததால் பூமியின்

திருமேனியில் பாசி படிந்து அழுக்கேறிப் போயிற்று. அவளை இடந்தெடுக்க அவதரித்த பன்றியின் அழுக்கு உடம்பிலிருந்து நீர் சொட்டியது. பெருமானுடைய திருமேனி நம் உடலைப்போலே பஞ்சபூதங்களால் ஆக்கப்படாமல் பஞ்ச சக்திகளாலும், பஞ்ச உபநிஷத்துக்களிலிருந்தும் உருவானதானபடியால் அழுக்கோ, வ்யாதியோ, மூப்போ, மரணமோ கிடையாது. இப்படி இருக்கையில் பன்றியின் அழுக்குடம்பலிருந்து நீர் வருமா என்ற ஐயம் எழும். ஆண்டாள் பாசுரத்திற்கு உரை எழுதுகிற பெரியவாச்சான் பிள்ளை இதன் மர்மத்தை விடுவிக்கிறார். உலக வழக்குப்படி மனைவி அலங்கரித்துக் கொண்டு மகிழ்ச்சியோடு இருந்தால்தான் கணவன் அலங்கரித்துக் கொள்ள வேண்டும். மனைவி துன்பத்தில் இருக்கும் போது கணவன் மட்டும் அலங்கரித்துக் கொண்டால் அது கேலிக்குரியது. இதை ஒட்டியே சிறந்த கணவனான வராஹனும் பூமாதேவி துன்புற்று இருக்கையில் தான் அலங்கரித்துக் கொள்ளக்கூடாது என்று அழுக்குடம்பில் நீர் சொட்ட பன்றியாய்ப் பிறந்தான். பூமியிடம் பெருமாளுக்கு உண்டான காதலை வர்ணிக்க வார்த்தையில்லை. மேலும் இப்பாடலில் ஆண்டாள் வராஹனை மானமிலாப் பன்றி என்கிறாள். இதற்கு இருவகையாக பொருள் கூறுவர். முதலில் அபிமானமிலாப் பன்றி என்று பொருள். ஈச்வரன் என்ற செருக்கு சிறிதும் இல்லாமல் பன்றிக் கூட்டத்தோடே இரண்டறக் கலந்த

எளிமை இங்கே எ[illegible]க்கப்படுகிறது. இதை இராமாயணத்தில் நடந்த ஓர் நிகழ்ச்சியின் மூலம் புரிந்துக் கொள்ளலாம். மாரீசன் பொன்மானாக வேடமிட்டு வந்தபோது அருகில் இருந்த மான்கள் பொய்மானை நுகர்ந்து பார்த்து அரக்கவாடை வீசியதால் இது நம் மான் இனம் இல்லை என்று விலகி ஓடிவிட்டன. மாரீசனால் உருவத்தை மாற்ற முடிந்ததே தவிர அரக்க வாடையை ஒழிக்க முடியவில்லை. ஆனால் பெருமாள் பன்றியாய் வந்தபோது அருகில் இருந்த பன்றிகள் நுகர்ந்து பார்த்து இது நம் இனம், என்று மேல் விழுந்து புரண்டன. பெருமாள் உருவம் மாறினதோடு மட்டும் இல்லாமல் தானே ஈச்வரன் என்ற வாஸனையையும் மறைத்துக் கலந்ததால் அவனை அபிமானமிலாப் பன்றி என்று போற்றுகிறார்கள்.

இவனைப்போல் உலகில் வேறொரு பன்றி இல்லாதபடியால் இரண்டாவது பொருளில் உபமானமிலாப் பன்றி (நிகரற்ற பன்றி) எனப்படுகிறான். அபிமானமும், உபமானமும் இல்லாமல் பூமிப் பிராட்டியிடம் காதலை வெளிப்படுத்தவே பூவராஹன் தோன்றினான்.

கம்பர், திருமால் பூமியிடம் கொண்ட பேரன்பை விராதவதை படலத்தில் ஓர் பாட்டில் வரைகிறார்.

"அரவு ஆகிச் சுமத்தியால், அயின் எயிற்றின் ஏந்துதியால்
ஒரு வாயில் விழுங்குதியால், ஓர் அடியால் ஒளித்தியால்
திரு ஆன நிலமகளை: இஃது அறிந்தால் சீறாளோ,
மரு ஆரும் துழாய் அலங்கல் மணிமார்பில் வைகுவாள்?"

(கம்பராமாயணப் பாட்டு)

இராமன் விராதனை அழித்து அவனுக்கு சாபவிமோசனம் கொடுக்கும்போது விராதன் இராமனைப் போற்றுகிறான். "ஹே இராம! பாதாளத்தில் ஆதிசேஷ வடிவத்தோடே பூமியைத் தலையால் தாங்குகிறாய், வராஹனாய்ப் பிறந்து இடந்தெடுக்கிறாய், ப்ரளய காலத்தில் விழுங்குகிறாய். த்ரிவிக்ரமனாய் அளக்கிறாய். இப்படி ஒருதலைப் பக்ஷமாய் பூமியைக் காதலிப்பதைக் கண்டு உன்மார்பில் இருக்கும் மஹாலக்ஷ்மி சீற்றமடைய மாட்டாளோ?" என்று கேலியாகவே ஆழ்ந்த கருத்தை வெளியிடுகிறான்.

வராஹனுக்கு பூமிப் பிராட்டியோடே நடந்த திருக்கல்யாணத்தை பெரியாழ்வார் அழகுற வர்ணிக்கிறார்.

மண்ணும்மலையும் மறிகடல்களும் மற்றும்யாவுமெல்லாம் *
திண்ணம் விழுங்கியுமிழ்ந்ததேவனைச் சிக்கென நாடுதிரேல்
எண்ணற்கரிய தோரேனமாகி இருநிலம்புக்கிடந்து *
வண்ணக்கருங்குழல் மாதரோடு மணந்தானைக் கண்டாருளர்.

(பெரியாழ்வார் திருமொழி - 4-2-9)

பூமி, மலைகள், ஸமுத்ரங்கள் மற்றும் எல்லாவற்றையும் ஊழிக்காலத்தில் விழுங்கிப் படைப்பின் போது உமிழ்ந்த பெருமாளை ஊற்றத்துடன் அடைய ஆசைப்பட்டால், நினைத்தற்கரிய, ஒப்பற்ற மஹாவராஹமாய் பூமியை இடந்தெடுத்து கருத்த அழகான திருக்குழலுடைய பூமிப் பிராட்டியை மணந்த பூவராஹனை காணுங்கள் என்கிறார். தைத்திரீய உபநிஷத்தும்

'உத்₄ருதாஸி வராஹேண க்ருஷ்ணேன ஶதபா₃ஹுனா'

என்று நூறு கைகளுடைய வராஹத்தால் நீ தூக்கப்பட்டாய் என்று பூதேவியைப் போற்றுகிறது.

இன்னும் சொல்லற்கறிய பல குணங்களோடு பூவராஹன் ஸேவை சாதிக்கிறான். இத்திருக்கோயிலுக்கு அச்சுதப்ப நாயக்கர் காலத்தில் பல திருவாபரணங்களும் வாஹனங்களும் ஸமர்ப்பிக்கப்பட்டு திருமதிளும் கட்டப்பட்டது. பின்னர் சிலகாலம் இத்திருக்கோயில் நிர்வாகம் சோளசிம்ஹபுரம் கோமில் கந்தாடை தொட்டையாசார்யஸ்வாமி திருமாளிகையிடம் இருந்தது. சந்நிதிக்குப் பின்புறத்தில் நித்ய புஷ்கரணிக்கரையில் உள்ள மண்டபத்தில் ஸ்வாமி தொட்டையாசார்யர் இருந்ததாகவும், அவர் இவ்வூரிலேயே பரமபதித்த படியால் அங்கேயே திருவரசு அமைந்ததாகவும் காணப்படுகிறது.

வேதாந்த தேசிகர் தம்முடைய "பூஸ்துதியில்"

பத்யுர் த$_3$க்ஷிண பாணி பங்கஜபுடே விந்யஸ்த பாத$_3$ாம்புஜம்
வாமம் பந்நக$_3$ ஸார்வ பௌ$_4$ம ஸத்ருசம் பர்யங்கயந்தீ பு$_4$ஜம்

என்று பூவராஹனின் திருக்கோலத்தை வர்ணிக்கிறார்.

பூமிப் பிராட்டி பெருமானின் இடது மடியில் அமர்ந்துக்கொண்டு தன்னை அணைத்துக் கொண்டிருக்கிற வராஹனின் இடது கையையே அணையாகக் கொண்டு சாய்ந்திருக்கிறாள். அவளுடைய இரண்டு திருவடிகளை வராஹன் தன் வலது கையால் தாங்கி உலகோர்க்கு காட்டி ரஹஸ்யமாய் ஏதோ உபதேசிக்கிறான். "வராஹனான என்னை நல்லதாகக் காண்பதற்கு முன் பூமியின் திருவடிகளை நல்லதாக பற்றுங்கள்'' என்று சொல்லுகிறானோ? பூவராஹனே நாம் கண்ட, காண்கின்ற, காணவேண்டிய நல்லது.

## மறவாத வராஹன்

நாம் வராஹனை மறவாமல் நினைவில் கொண்டால் நாம் வாழும் போதும் கடைசிக் காலத்திலும் பெருமாள் நம்மை மறவாமல் உயர்ந்த கதியை அடைவிக்கிறான். நாம் அவனை மறவாமல் இருப்பதற்கு நமக்கு ஞானத்தை ஊட்டுவதால் வராஹன் ஞானப்பிரான் என்று பெயர் பெற்றான். ஆழ்வார் திருநகரியில் எழுந்தருளியிருக்கும் வராஹனுக்கு ஞானப்பிரான் என்று திருநாமம். இவனையே நம்மாழ்வார் ''ஞானப்பிரானையல்லால் இல்லை நான் கண்ட நல்லதுவே'' என்று பாடினார்.

பிரான் என்றால் உதவிபுரிபவன். நமக்கு ஞானத்தை ஊட்டி உதவிபுரிவதை திருமழிசை ஆழ்வார்.

ஈனமாயவெட்டு நீக்கி ஏதமின்றி மீது போய்
வானமாளவல்லையேல் வணங்கி வாழ்த்தென்னெஞ்சமே
ஞானமாகிஞாயிறாகி ஞாலமுற்று மோரெயிற்று
ஏனமாயிடந்த மூர்த்தியெந்தை பாதமெண்ணியே

(திருசந்த விருத்தம் 114)

''என்னுடைய மனதே! அறிவை மறைக்கும் அவித்யா, கர்ம, வாசனை, ருசி, உடற்பிறப்பு, மூன்று தாபங்கள் ஆகிய எட்டையும் போக்கி அர்ச்சிராதி மார்க்கத்தாலே பரம பதத்தை அடைந்து இன்பமுற ஆசைப்பட்டாய் ஆகில் ஆத்ம ஞானத்தை அளிப்பவனாய் பூமியை வராஹமாய் இடந்தெடுத்த

ஸ்வாமியினுடைய திருவடிகளையே வணங்கி வாழ்த்து'' என்கிறார்.

இப்பாடலின் படி முதலில் ஞானத்தை அருளுகிறான் ஞானப்பிரான். இதன் மூலம் திருமாலே முழுமுதற் கடவுள். அவன் திருவடிகளே அவனை அடைவிக்கும் வழி என்ற உறுதி கொண்டு, ஆசார்யன் மூலமாய் வராஹனின் திருவடிகளில் சரணம் புக வேண்டும். இதை ஸ்வாமி நம்மாழ்வார்,

ஏனமாய் நிலம் கீண்ட என்னப்பனே கண்ணா என்று
மென்னையாளுடை✸
வான நாயகனே மணி மாணிக்கச்சுடரே✸,
தேனமாம்பொழில் தண் சிரீவரமங்கலத்தவர் கைதொழவுறை
வானமாமலையே அடியேன் தொழவந்தருளே!

(திருவாய்மொழி 5-7-6)

''மஹாவராஹமாய் ப்ரளயம் கொண்ட பூமியை எடுத்தாய் ஸம்ஸாரத்திலே அகப்பட்ட என்னையும் எடுத்தாய், பூமிப் பிராட்டிக்கு உதவினது எனக்கும் உதவினது தான். ச்ரமத்தை போக்கும் சிரீவர மங்கல நகரிலே (வானமாமலையிலே) வாஸம் பண்ணுவோரின் தொண்டினை ஏற்றுக் கொள்ளுகின்ற வானமாமலையே! நானும் அடிமை செய்து வாழவந்து தோன்ற வேண்டும்'' என்று வராஹனையே வானமாமலைப் பெருமானாகக் கொண்டு சரணம் புகுகிறார். ஞானப்பிரானே அறிவு கொடுத்து அவ்வறிவின் பயனான சரணாகதியையும் நாம் மறவாமல் செய்யும்படி அருளுகிறார்.

ராமானுஜ ஸிந்தாந்தத்தின் படி எந்தப் பிறவியில் சரணாகதி அநுஷ்டிக்கிறோமோ அதுவே கடைசிப் பிறவி. அப்பிறவியின் கடைசியில் இந்த உடல்விட்டு அர்ச்சிராதி மார்க்கத்திலே ப்ரயாணப்பட்டு ஸ்ரீ வைகுண்டத்தை அடைந்து அந்தமில் பேரின்பத்திலே மூழ்குவோம். என்றோ பண்ணிய சரணாகதியை நாம் மறந்தாலும் பெருமாள் மறவாமல் நினைவில் கொள்கிறான். கடினமான பக்தி மார்க்கத்தை பற்றியவர் மரணபடுக்கையிலும் மறவாமல் பெருமானை நினைத்தால்தான் பரமபதம் கிட்டும். ஆனால் சரணாகதனோ "அப்பொழுதைக்கு இப்பொழுதே சொல்லி வைத்தேன்" என்னும் பெரியாழ்வாரின் பாசுரத்தின்படி, ப்ராணன் பிரியும் ஸமயத்தில் பெருமாளை நினைக்க மறந்தாலும் அவன் நம்மை மறவாமல் நினைவில் கொண்டு மோக்ஷத்திற்கு அழைத்துச் செல்கிறான். காஞ்சி தேவப் பெருமாள் ராமாநுஜருக்கு அருளிய ஆறு வார்த்தையில் "அந்திம ஸ்ம்ருதி வர்ஜனம்" என்று சரணாகதனுக்கு கடைசி நிமிஷச் சிந்தனை தேவையில்லை என்று கூறுகிறான். சரணாகதியின் எளிமையைப் பறை சாற்ற இதைவிட வேறு எந்த சாக்ஷி வேண்டும்? பெருமான் தரும் இவ்வுறுதியை உட்கொண்டதே வராஹ சரம ச்லோகம் என்று புகழப்படுகிறது.

"ஸ்தி$_2$தே மனஸிஸு ஸ்வஸ்தே$_2$ சரீரே ஸதியோ நர:
த$_4$ாது ஸாம்யே ஸ்தி$_2$தே ஸ்மர்த்தா விச்வ ரூபம்ச மாம் அஜம்
ததஸ்தம் ம்ரியமாணந்தம் காஷ்ட பாஷாண ஸன்னிப$_4$ம்
அஹம் ஸ்மராமி மத்ப$_4$க்தம் நயாமி பரமாங்க$_3$திம்"

(வராஹ சரமஸ்லோகம்)

"எந்த ஒரு ஆன்மா தன் உடலும் மனமும் நிலையாக இருக்கும்போது, உலகத்தையே சரீரமாகக் கொண்ட என்னிடத்தில் சரணம் புகுகிறானோ அவன் மரணப் படுக்கையில் கல்போலே கட்டைப் போலே நினைவு தப்பிக் கிடக்கும் போது நான் அவனை மறவாமல் கைப்பற்றி பரமமான கதிக்கு அழைத்துச் செல்கிறேன்'' என்று நம்பிக்கை ஊட்டுகிறான் வராஹன்.

இப்பேச்சை இம்மி அளவும் அசைக்க முடியாது என்பதை ஆண்டாள் "பேசியிருப்பனகள் பேர்க்கவும் பேறாவே'' (நாச்சியார் திருமொழி 11-8) என்று வியந்து பேசுகிறாள்.

பூமிப் பிராட்டியை இடந்தெடுத்து அவள் வேண்டியதற்கு இணங்க குழந்தைகளான நமக்காக வராஹன் உபதேசித்ததே வராஹ புராணம். அதில் உள்ளதே வராஹ சரமச்லோகம்.

ஆண்டாள் பூமிப்பிராட்டியின் அவதாரமான படியால் வராஹப் பெருமானிடத்திலும் அவன் உறுதி மொழியிலும் அசைக்க மாட்டாத உறதி படைத்தவள். நாம் அவனை மறக்காதிருக்க ஞானங் கொடுத்து - ஞானத்தின் பயனாய் அவன் திருவடிகளிலேயே சரணாகதி பண்ண வைத்து, சரணாகதி பண்ணியவர்கள் அவர்களே மறந்தாலும் தாம் மறவாமல் மோக்ஷம் அளிக்கும் தனிப் பெரும் கடவுள் ஸ்ரீ வராஹபெருமான். எத்துணை தேடினாலும் நாம் காண்பதற்கு இவனைவிட நல்லது கிட்டாது.

# நான் கண்ட நல்லது

ஒரு பொருள் அல்லது மனிதன் இரு வகையில் நன்மை செய்தாலே அதை நல்லது என்று கொண்டாடுவோம். நல்லது என்பது ப்ரியமாகவும் ஹிதமாகவும் இருக்க வேண்டும். அதாவது நமக்கு நீடித்து நன்மை செய்வதாகவும் அதே சமயத்தில் இனியதாகவும் இருந்தல். உலகில் நல்லது எல்லாம் இனியவை ஆகவே இருக்கும் என்றோ இனியவை யெல்லாம் நன்மை பயக்கும் என்றோ காண்பதில்லை. உதாரணத்திற்கு ஸத்யம் (உண்மை) அல்லது வேப்பங்கொழுந்து நன்மை செய்யும், ஆனால் இனிதானதில்லை. பல திண்பண்டங்கள் இனிதாக இருந்து உண்ண ருசிப்பவையாக இருக்கின்றன. ஆனால் நன்மை செய்யாமல் உடல் நலத்தை கெடுக்கும். ஒரு குழந்தையின் நன்மையில் தந்தைக்கு அதிக நோக்கமும், அதற்கு பிடித்ததைத் தருவதில் (இனியது) தாய்க்கு அதிக நோக்கமும் இருக்கும். தாயும், தந்தையும் சேர்ந்து குழந்தைக்கு ஸம அளவில் நன்மையும் இனிமையும் அளிக்க வேண்டும்.

வராஹன், லக்ஷ்மீ வராஹன், பூ வராஹன் தானே தாயாகவும், தந்தையாகவும் இருந்து ப்ரியத்தையும், ஹிதத்தையும் செய்கிறான். ஆகவே தான் வராஹப் பெருமானையே "தான் கண்ட நல்லதாக" நம்மாழ்வார் அறிவிக்கிறார்.

மேலும் நல்லது என்பது உடலுக்கும் ஆன்மாவிற்கும் சேர்த்து நன்மை செய்ய வேண்டும். வராஹனின் நெடிய திருமேனி, திண்தோள், அகன்ற மார்பு, பூமியை இடந்து எடுத்த நிகரற்ற தன்மை, அஸுரனைக் கொன்ற ஆற்றல் ஆகியவற்றை தியானித்தால் நம் வியாதிகளும், சோம்பலும் பறந்து போய் நாம் எடுத்துக் கொண்ட எந்த நல்ல வேலையிலும் ஊக்கமும், வெற்றியும் கிட்டும். வராஹன், பன்றியாய்ப் பிறந்த எளிமை, பிறர் துன்பம் கண்டு பொறுக்காமல் ஓடி வந்து காக்கும் கருணை, ஸ்ரீமுஷ்ணத்தில் பன்றிக்கு ப்ரியமான கோரைக் கிழங்கு அமுது செய்வதற்காக காத்திருக்கும் அழகு ஆகியவற்றை தியானித்தால் ஆத்ம ஞானம் உதித்து, அவனிடம் பக்தி பறந்து, சரணாகதி செய்து ஆன்மா நன்மை அடையும். "உடலும் ஆன்மாவும் அவனது" என்ற எண்ணம் நாம் கண்ட நல்லது.

வராஹனிடம் இருக்கும் ஒவ்வொரு பண்புகளையும் நாம் இயன்ற அளவு கடைப்பிடிக்க முயல வேண்டும். சிலவற்றைக் கீழே காண்போம்.

* அழுக்கு உடலோடு எந்த சாதியில் பிறந்தாலும் குற்றமில்லை. அன்பும் பக்தியும் இன்றி பகையோடு வாழ்ந்தாலே குற்றம்.

* பிறர் துன்பம் கண்டு பொறுக்க மாட்டாமல் இயன்றவரை உலகோர்க்கு உதவி செய்தலே ஸ்ரீ வைஷ்ணவம்.

* நல்ல செயல்களில், பெருமானின் திருவடிகளில் உறுதியான நம்பிக்கையோடு, நாம் செய்கிறோம் என்கிற

செருக்கு இல்லாமல் ஈடுபட்டால் அவை உயர்ந்த பலன்களை அளித்து உடலுக்கும் ஆன்மாவுக்கும் நன்மை தரும்.

நம்மாழ்வார் தான் கண்ட நல்லதாக வராஹப் பெருமானையும் அதன் மூலம் மேலே சொன்ன நன்னடத்தைகளையும் நமக்கு உபதேசித்தார் என்பது சாலச் சிறந்தது.

எத்தனைஆண்டுகள் எத்தனை மனிதர்கள் சேர்ந்து ஆராய்ந்தாலும் எளிதில் உணர்ந்து கொள்ள முடியாத பரமனை இவ்வளவு எளிதாக நமக்கு காட்டிக் கொடுத்த நம்மாழ்வாரே நாம் கண்ட நல்லது என்று சொல்லத்தட்டில்லை.

தஸ்ய யக்ஞ வராஹஸ்ய விஷ்ணோ: அமிததேஜஸ:!

ப்ரணாமம் யேபி குர்வந்தி தேஷாமபி நமோ நம:!

எல்லையற்ற ஒளிபடைத்த யக்ஞ வராஹமாய் அவதரித்த விஷ்ணுவுக்கும் அவனைத் தொழும் எவர்க்கும் வணக்கம்!

